# 20 மரபுக் கதைகள்



பொன் குலேந்திரன்

# Contents

# இலங்கையின் மரபுக் கதைகள் (பொருளடக்கம்)

---

பொருளடக்கம்

6. பூதத்தம்பி
7. முன்னேஸ்வரம் பத்திரகாளியம்மன்
8. தேவத்தகம பள்ளிவாசல்
9. சிகிரியா
10. சரதியல் —
11. விகாரமகா தேவி
12. வற்றாபளை அம்மன்
13. தலவில்லு கதை
14. அசோக்கமாலா
15. கண்ணுசாமி கண்டி மன்னனான கதை
16. இலங்கையும் இராவணனும்
17. நாகதீபம்
18. மாருதப்புரவீகவல்லி
19. செண்பகப் பெருமாள்
20. சீனிகம கோவில்



# இலங்கை மரபுக் கதைகள் பற்றி அறிமுகம்

## இலங்கை மரபுக் கதைகள் பற்றி அறிமுகம்

மரபுவழிக்கதைகள் எல்லாம் ஆதாரமுள்ளவை அல்ல. பெரும்பாலும் அவை வாய்வழி வந்தவையே. சிகிரியா, சாலியா, அசோகமாலா காதல் கதை, விகாரமகாதேவி, பூதத்தம்பி கதை, கடைசி கண்டி மன்னன் கதை போன்றவை வரலாற்று நூல்களில் பதிவாகியுள்ளன. வெளிநாட்டவர்கள் மரபு வழிக்

கதைகளோடு தொடர்புள்ள ஊர்களைத் தேடிப் போய் பார்ப்பார்கள்.

இலங்கையின் தமிழ்பகுதிகளில் பல மரபுக் கதைகள் கோவிலுடன் தொடர்புள்ளவை. இராமயாணத்தில், சிவபக்தனான இராவணன் இலங்கையை ஆண்ட மன்னன் என்று குறிபிட்டுள்ளது. இது பலருக்குத் தெரிந்த கதை. இலங்கேஸ்வரன் என்று அழைக்கப்பட்ட இராவணனின் அரண்மனை இருந்த இடம், சீதை சிறைவைக்கப்பட்ட இடம், ஹனுமான் எரித்த அசோக வனம், இராவணனின் புஷ்பக விமானம் நிறுத்தி வைக்கப்படட விமதனத்தளம் இருந்த இடம், அமைத்த சுரங்கப் பாதைகள் ஒரு மரபுக் கதையில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் வரும் இருபது கதைகள், இந்துக்கள், பௌத்தர்கள், கத்தோலிக்கர்கள்,

இஸ்லாமியர்கள் வழிவந்த மரபுக் கதைகள். இது போன்று பல கதைகள் உண்டு. வாசித்து இரசியுங்கள். இலங்கையைப் பிறப்பிடமாகக் கொண்டு, வெளிநாடுளில் புலம் பெயர்ந்து வாழும்; இளம் சமுதாயததினருக்கு இக்கதைகளை சொல்லுங்கள். நம்பினால் நம்பட்டும்.



# அணிந்துரை

பொன் குலேந்திரன் அவர்கள் அனுப்பிய மரபுக்கதைகள் தொகுப்பை படிக்க எடுத்த நான் அதைக் கீழே வைக்கவில்லை. இரண்டு மணி நேரத்தில் படித்து முடித்த பின்னரே அதை மூட முடிந்தது. கதைகள் அத்தனை சுவாரஸ்யமாக இருந்தன. மரபுக் கதைகள் அழிந்து கொண்டு வருகின்றன. அவை வாய்வழியாக சந்ததி சந்ததியாக தொடர்பவை. இப்பொழுதெல்லாம் கதை சொல்லிக் கேட்பது குறைந்துவிட்டது. ஆகவே அழியும் நிலையில் உள்ள

கதைகளுக்கு அச்சுருவம் கொடுத்து நிலைபெறச் செய்யும் ஆசிரியருக்கு நன்றி பாராட்டாமல் இருக்க முடியாது.

நான் சிறுவனாக இருந்தபோது அம்மா சொல்லிய பல கதைகள் ஞாபகத்தில் உள்ளன. அவை அச்சுருவம் கண்டனவோ தெரியாது. ஒரு கதை பாட்டு வடிவில் இருக்கும். 'பண்டாரக் குளத்தடி முத்தனை கொண்டானே சேனாதிராசன்' என்று தொடங்கும். அம்மா முழுப் பாடலையும் பாடமாக்கி வைத்திருந்தார். நல்லூரில் நடந்த கொலையைப் பற்றியதுதான் பாட்டு. கோர்ட்டிலே சாட்சியை விசாரிக்கும் இடம் ரசிக்கும்படியாக அமைந்திருக்கும்.

குறுக்குக் கேள்விகள் அனேகமானவை

கூட்டில் துரைச்சாமி தம்புவும் கேட்டிட

நறுக்குத் தலைக்காரன் முத்துதான் என்றவள்

நாட்டினாள் அஞ்சாது பாருமடி.

குடுமி இல்லாதவனை 'நறுக்குத் தலைக்காரன்' என்று விவரித்தது எனக்கு அன்றும் சிரிப்பை வரவழைத்தது. இன்றும் வரவழைக்கிறது.

அசோகமாலா கதையை எத்தனை தடவை படித்தாலும் அலுக்காது. கதை கிறிஸ்துவுக்கு முன்னான ஒரு காலத்தில் நடக்கிறது. இலங்கையை ஆண்ட அரசன் துட்டகைமுனுவுக்கு இரண்டு மகன்கள். முடிக்குரியவன் பெயர் சாலியா. ஒருநாள்

அவன் அசோகமரக் காட்டிலே ஓர் அழகான பெண்ணைக் கண்டு காதல் வயப்படுகிறான். அவள் சண்டாளச் சாதி என்றாலும் தயங்காது அவளை மணக்கிறான். அரசன் அவர்களை அரண்மனையைவிட்டு துரத்திவிடுகிறான். அவர்கள் காட்டிலே வாழ்கிறார்கள். ஒருநாள் அசோகமால மூலிகையில் ரத்தம்பாலா என்ற பதார்த்தம் தயாரித்து அரசனுக்கு அனுப்புகிறாள். அரசன் கோபத்திலே அதை சுவற்றிலே எறிகிறான். சிறிது காலத்தில் அரசனுக்கு தீர்க்க முடியாத வியாதி வந்தபோது சுவற்றிலே ஒட்டியிருந்த உனவை மருந்தில் சேர்த்து சாப்பிட்டபோது நோய் குனமாகிவிடுகிறது. அரசன் மகனை மன்னிக்கிறான். அசோகமாலாவும் கணவனும் அரண்மனைக்கு திரும்புகிறார்கள். ஆனால் அரசன் இறந்தபோது சாலியாவால்

அரசனாக முடியவில்லை. அவனுடைய தம்பி சாததிஸ்ஸவுக்கு ராச்சியம் கிடைக்கிறது. ராச்சியத்தை இழந்தாலும் அவன் காதல் மனைவியை கைவிடவில்லை. காதலைப் போற்றும் அதே சமயம் சாதியை எதிர்க்கும் அருமையான கதை.

இன்னொரு உருக்கமான கதை கண்டியில் உள்ள வைரவர் மலை சம்பந்தப்பட்டது. ஸ்ரீவிக்கிரமராஜசிங்கன் கண்டியை ஆண்ட காலத்தில் கன்னிப்பெண்ணை பலி கொடுத்தால் நாட்டில் சுபிட்சம் நிலவும் என்ற நம்பிக்கை இருந்தது. மன்னனின் அதிகாரி துனுவில என்பவன் பலி கொடுப்பது என்று நம்பவைத்து பெண்களை பலவந்தமாக அனுபவித்தான். ஒரு முறை கன்னிப் பெண்ணொருத்தியை பலி கொடுப்பதற்காக காட்டிலே

கட்டிப்போட்டுவிட்டு சேவர்கள் திரும்பிய பின்னர் துணிவில அவளை பலாத்காரம் செய்யமுயன்றான். அவளுடைய காதலன் ஒளித்திருந்து அவனைக் கொன்றுவிட்டு தன் காதலியுடன் கொழும்புக்கு ஓடித் தப்பினான். 1815ல் பிரித்தானியர்கள் கண்டியை கைப்பற்றிய பின்னர் அந்தப் பெண் தன் கணவனுடன் கண்டிக்கு திரும்பினாள்.

இந்த வகையாக சுவாரஸ்யமான பல கதைகள் இந்த தொகுப்பில் உள்ளன. மரபுக் கதைகள் வாய்வழியாக வாழ்வதால் துளி உண்மையில் ஆரம்பித்து ஒவ்வொரு சந்ததியினரும் அதை தங்கள் கற்பனை வளத்தால் பெருப்பிப்பார்கள். பனி உருண்டை உருள உருள பெரிதாகிவிடுவதுபோல இந்தக் கதைகளும்

*வளர்ந்துகொண்டே போகும். இவற்றை தேடித் தொகுத்து அழகாக தந்த பொன் குலேந்திரனுக்கு நன்றி கூற கடமைப்பட்டிருக்கிறோம். இதற்காக அவர் செய்த ஆராய்ச்சிகளும், தந்த சரித்திரக் குறிப்புகளும் படிக்கும்போது பிரமிப்பை ஏற்படுத்துகின்றன. அவருக்கு என் பாராட்டுகள். நீண்ட ஆயுளுடன் அவர் பணி மேலும் தொடரட்டும்.*

*அ. முத்துலிங்கம்*

*ரொறொன்ரோ, 14 ஏப்ரல் 2016*

# ஆசிரியரின் பேனாவிலிருந்து..



மரபுக் கதைகள் கேட்பதில் பலருக்கு

விருப்பம் அதிகம். அதுவும்; பாட்டி, பாட்டன், கதை சொல்லும் போது ஏதோ நேரில் பார்ப்பது போல் இருக்கும். ஆனால் கேள்விகள் கேட்டால் அதற்கு சாக்குப் போக்குச் சொல்லி “இக் கதை எனக்கு என் அம்மா சொன்ன கதை” என்று சொல்லி மழுப்பி விடுவார்கள். ஊருக்கு ஊர் கட்டுக்கதைகளில் சில ஒற்றுமையிருக்கும். கதையில் அதிசயம் நடப்பது பொதுவானதொன்றாகும். அப்போது தான் கதையில்; சுவர்ஸ்யம் இருக்கும்.

ஒரு சம்பவத்தை வைத்து அதற்கு கண். மூக்கு. காது. வாய். வைத்து கற்பனையில் கதை உருவாக்கப்படும். அது காலப் போக்கில் பலரின் கற்பனைகளுடன் கலந்து காது அல்லது மூக்கு நீண்டு மாற்றமடையும். இவை எழுத்தில் பதியாத கதைகள். சில

சமயம் நம்பக் கூடியவை. சில சமயம் இப்படியும் நடக்குமா என்று சிந்திக்க வைக்கும். அனேகமாக இவை கோயில்கள், கிறிஸ்தவ தேவாலயங்கள். மசூதிகளுடன் தொடர்புள்ளவை. காரணம் “அந்தக் கோயிலில் வாழ்ந்த சித்தர் அந்தக் கோயிலில் பல காலமாக இருக்கும் வேப்பமர இலையைப் பாவித்து முடமான பிள்ளையை எழுந்து நடக்க வைத்தார், கண்தெரியாத ஒருவனுக்குப் பார்வை கொடுத்தார் என்றால் அதே நிலையில் உள்ளவர்களும் தமக்கு அது நடக்காதா என்று திரண்டு அங்கு செல்வார்கள. அக்கதையினால் வேப்ப மரமும் கோயிலும் பிரபல்யமடையும். சில வேலை பிரசித்தமான ஊர் பெயர் தோன்றியதைப் பின்னனியாக வைத்து கதைகள் உருவாக்கப்பட்டவை. ஊர் பெயர்கள் அனேகமாக இனத்தின் பெயர்.

நதி. மரம், மலை, வழிப்பாட்டு தளத்துடன் இணைந்தவையாக இருக்கும். இதற்கு உதாரணமாக கதிர்காமத்தை எடுத்துக் கொள்ளலாம். நெற்கதிர்கள் நிறைந்த கமம், கதிர்காமமாயிற்று. சிங்களத்தில "கம" என திரிபடந்துள்ளது. இது போன்றே வில்லு வில்லுவாக மாறியுள்ளது. முருகன் அங்கு வள்ளியை சந்தித்ததால் கதிர்காமன் எனப் பெயர் அவருக்கு வந்தது. அதனால் கதிħகாமர் என்ற பெயர்கள் உள்ளவர்கள் எல்லோரும் கடவுள்கள் என்பதில்லை.

அங்கு நடந்த அதிசயங்களைப் பற்றி ஏராளமான கதைகளுண்டு. முருகன் வள்ளியைக் கண்டு காதலித்து திருமணம் செய்த கதை. அந்தச் சுற்றாடலில் உருவாகியதே. பின்னர் சினிமாவானது. மரபுபுக்கதைகள் பலவற்றிற்கு ஆதாரம்

கிடையாது. சில வரலாற்றில பதிவாகியுள்ளன. தமிழ் நாட்டில் மரபு வழி வந்த கதைகள் ஏராளம். அக்கதைகளை அடிப்படையாக கொண்டு கிராமத்துத் தெய்வங்களான மாரியமட்மன், மாடாசாமி, கருப்பண்ணாசாமி, மதுரைவீரன், சுடலைசாமி; போன்ற தெய்வ வழிபாடுகள் கிராமமக்களிடையே தோன்றியுள்ளது. இக்கதைகளைப் பதிவு செய்யாவிட்டால் காலப்போக்கில் அவை மறந்து விடும்.

கட்டுக் கதைகளை மரபு வழி வந்த நாட்டுக் கதைகள் எனவும் அழைக்கலாம். சில பாட்டிமார் தமது பேரப்பிள்ளைகளை தூங்க வைக்க சொல்லும் பாட்டிக் கதைகளாகும். கட்டுக்கதைகள் சில சமயம் சினிமாவாக மாறியதுண்டு. சுற்றிலாப் பயணிகளுக்குப் புராதான இடங்களைக்

காட்டுபவர் அவ்விடத்தோடு தொடர்புள்ளமரபு வழிவந்த கதையைச் சொல்லி அவர்களின் பாராட்டைப் பெறுவார். ஆனால் அவர்களுக்கு வரலாறு தெரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை. இதறகு உதாரணம் மாமல்லபுரத்தை வெளிநாட்டுப் பயணிகளுக்கு சுற்றிகாட்டுபவருக்குப் பல்லவர்களைப் பற்றி தெரிந்திருக்க தேவையில்லை. எல்லாமே கதைசொல்லும் விதத்தில் தங்கியுள்ளது. இக்கதைகொத்தில் வரும் சரதியல், சிகிரியா, அசோக்கமாலா, பயிரவ மலை போன்ற கதைகள் சிங்கள மக்களிடையே பிரபல்யமான கதைகள். சினிமாவாகவும் எடுக்கப்பட்டுள்ளது

பொன் குலேந்திரன் — மிசிசாகா — கனடா

# *மரபுக் கதை 1 (வேலணைப் பள்ளிவாசல்)*

---



## மரபுக் கதை 1

மரபு வழி வந்த் கதைப் தொகுபில்;" முதலாவதாக வருவது யாழ் குடா நாட்டில் உள்ள வேலணைப் பள்ளிவாசல். வேல் + அணை = வேலணையாகியது என்பர். அதனால் இந்து மதத்துக்கு இங்கு தொடர்புண்டு. ஒரு காலத்தில் பண்ணைப் பாலம் வருமுன் வேலணைத் தீவாக இருந்து, பாலம் வந்து தீவு என்ற சொல்லை விழுங்கி விட்டது. கமத்திற்கு சிறப்பான கிராமம் இது. இங்கு பெரும்பானமையாக வாழ்பவாகள் இந்துக்கள். யாழ்நகரில் இருந்து வெகு தூரத்தில் இல்லை.

இந்து மதம் செழித்த வளர்ந்த இடத்தில் எவ்வாறு பள்ளிவாசல் வந்தது?

போர்த்துக்கேயரைப்போல் அங்கு முஸ்லீம்கள் வந்து ஆக்கிரமித்து கோயில் கட்டவில்லையே? அது தான் கதையின் வித்து. யாழப்பாண வாவிக்; கரை ஓரத்தில் இருந்து வெகு அன்மையில், மண்கும்பான் என்ற இடத்தில் அற்புதங்கள் நடக்கும் பள்ளிவாசல் ஒன்று மரச்சோலைக் கிடையே அமைந்தள்ளது. அற்புதங்கள் என்றவுடன் அதை அங்கிருந்த அகற்ற இந்துக்களும் தயங்குவர். சனங்களும் அங்கு கூட்டமாகப் போவதினால் ஊரின் பெயரும் பிரசித்தமடையும்.

தென்னிந்தியாவிலிருநது மலபார், கீழக்கரை, வேதார்ணியம் போன்ற கரையோர ஊர்களிலிருந்து இலங்கைக்கு முஸ்லீங்கள் வந்ததாக வரலாறு சொல்கிறது. ஒரு காலத்தில் இன்றைய கந்தசாமி

கோயிலிருந்த இடத்தில் முஸ்லீம்கள் இருந்ததாக அறியப்படுகிறது. அந்தக் காலத்தில் தென்னிந்தியாவைச் சேர்ந்த இந்து மதத்திலிருந்து முஸ்லீம் மதத்துக்கு மதம்மாறிய "கந்தசாய்பு" என்ற வம்சத்தினர் வியாபாரம் செய்யும் நோக்கமாக சாவகச்சேரி, கொடிகாமம், மிருசுவில், உசன், எழுதுமட்டுவாள் போன்ற ஊர்களில் குடியேறினர். சிலகாலத்தின் பின் அங்கிருந்து வியாபாரம் செய்ய வசதிப் படாமையால் இப்போது நல்லூர் கந்தசாமி கோயிலிருக்கும் மேல் மேல் பகுதியான குருக்கள் வளவுக்கு குடியேறி அங்கு மசூதி ஒன்று கட்டியதாக பழம் நூல்கள் கூறுகின்றன அப்படி வந்தவர்கள் யாழ்ப்பணக் குடா நாட்டில் உசன் என்ற பகுதியில் குடியேறி, பி ன்னர் நல்லூரில் உள்ள குருக்கள் வளவுக்கு குடி

பெயர்ந்தனர். நல்லூர் முருகன் கோவில் கட்டுவததகாக அவர்கள் சோனகத் தெருப் பகுதிக்கு இடம்பெயர்ந்தனர். இது வரலாறு.

நல்லூர் மூலஸ்தானத்து அருகே ஒரு முஸ்லீம் சித்தர் ஒருவர் அடக்கம் செய்யப்பட்டதாயும், அக்காரணத்தால் முஸ்லீம்கள் அவரை அடக்கம் செய்த இடத்தைத் தரிசித்து வர ஒரு வாசல் கோயிலுக்குள் போக தோற்றுவிக்கப்பட்டது. அதுவல்லாமல் அவர்கள் முதலில் வசத்த இடததை விட்டு அகன்று சோனக தெருவுக்கு இடம் பெயர்ந்ததினால் கோயில் வாசலில் முஸ்லீமகள் கற்பூரம் விற்பதற்கு இடம் கொடுக்கப்பட்டது.

வெகு காலத்துக்கு (எந்தக் காலம், ஆண்டு என்று கேட்க வேண்டாம்) முன்பு, ஒரு நாள்

ஒரு விவசாயி தனது நிலத்துக்கு உரமாக காய்ந்த இலைகளைத் புதைக்கப் போனபோது அவன் வைத்திருந்த மண்வெட்டி “டொங்” என்ற சத்தத்துடன் மண்ணுக்குள் இருந்த ஒரு பொருளுடன் மோதியது. ஏதோ புதையலாக்கும் என்று எண்ணி அவன் பார்த்த போது அழகிய பிரேதம் ஒன்று இருப்பதைக் கண்டான். வெகு காலமாக புதைந்து கிடந்த பிரேதத்தில் இருந்து மண்வெட்டி வெட்டி இரத்தம் வரத் தொடங்கியது. அது தான் கதையில் வரும் அதிசயம். பேயோ பிசாசோ என்ற பயந்து, அவன் மண்ணை மூடிவிட்டு வீட்டுக்குப் ஓடிப் போய்விட்டான் ஒருவருக்கும் நடந்ததை சொல்லவில்லை. அது புதையலாக இருந்திருந்தால் கதை வேறு. இரவும் வந்தது. அவனுக்கு தான கண்ட பிரேதத்தின் நினைவு தூக்கததை

கொடுக்கவில்லை. அது நடந்த இடம் அவன் வீட்டிலிருந்து வெகுதூரத்தில் இல்லை. நடந்ததை நினைத்தபடி தூங்கிவிட்டான்; கனவில் அந்த அழகிய பிரேதம் வந்தது. தான் அபூபக்கர் என்ற ஞானி ஒருவரின் பிரேதம் எனவும். அந்தப் புனிதமான இடத்தில் பள்ளிவாசல் கட்டும் படி யாழ்ப்பாணத்தில் உள்ள லெப்பை என்பவரிடம் போய் முழுக் கதையையும் சொல்லும் படி சொல்லிற்று. லெப்பையின் விலாசத்தை நிட்சயமாக கொடுத்திருக்கலாம். லெப்பையின் கனவிலும் பிரேதம் தொன்றயதோ தெரியாது. லெப்பையைத் தேடி யாழ்ப்பாணம் போனார் விவசாயி; அவர் இருந்தயிடம் யாழ்ப்பாணம் சோனகத் தெருவா என்பது கதையில் சொல்லப் படவில்லை. ஞானியின் பிரேதம் கண்டு பிடிக்கபட்ட இடத்தில் பள்ளிவாசல்

லெப்பையால் கட்டப்பட்டது. விவசாயி முஸ்லீமாக மாறினாரா என்பது தெரியாது. இந்த அதிசயத்தை அறிந்த இந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள் எல்லொரும் அங்கு சென்றார்கள். ஞானிக்கு எல்லா மதமும் சம்மதமே! ஞானியின் கல்லறையானது நீண்டது. ஆகவே அந்த ஞானி உயரமானவர் என்பது பலர் கருத்து. பள்ளிவாசலுக்கு அருகே உள்ள கிணற்றுத் தண்ணீர் கடற்கரைக்கு அருகே இருந்தாலும் உப்பு உவர்ப்பு இல்லாத நன்னீராக இருந்தது இரண்டாவது அதிசயம். ஆகவே நோய்களை தீர்க்க வல்லது என அங்கு தரிசிக்க வந்தவர்கள் நம்பினர். அங்கு வரும் பக்தர்கள் சில நாட்கள் தங்கிச் செல்வார்கள். ஆனால் பள்ளிவாசலை இடிந்து விழாமல் காப்பாற்ற வேண்டும் என்று ஒருவரும் சிந்திக்கவில்லை.

பள்ளிவாசலுக்கான ஏணியும் கதவும் ஒரு நாள் கடற்கரை ஓரத்தில் இருக்க கண்டுபிடிக்கப்பட்டது. அப்பள்ளிவாசலை பாதுகாக்க காப்பாளர்கள் இல்லை. அங்கிருநதது தென்னை மரங்கள்களில் தேங்காய் திருடினால் கண்கள் தெரியாமல் போய் கீழே விழ நேரிடும் என்பது உப கதை. அதோடு மட்டுமல்ல பள்ளிவாசலைக் காவல் செய்யும் நாகங்களால் தீண்டப்படுவர் என்பது மற்றொரு உபகதை. இது போன்ற கதைக்கும் நல்லூர் கோயிலினுள் உள்ள முஸ்லீம் ஞானி ஒருவரின் சமாதிக்கும் தொடர்புண்டா எனக் கேட்கவேண்டாம். அது இன்னொரு கதையாகும். ஆனால் ஒன்று மட்டும் நிட்சயம். பள்ளிவாசல் பாழடைந்த நிலையில் அங்கு இன்னும் இருக்கிறது. புலம் பெயர்ந்து சென்ற யாழ்ப்பாணத்து

முஸ்லீம்கள் திரும்பி வந்தால் சில சமயம் பள்ளிவாசலைப் புதுப்பிக்கலாம். யார் கண்டது.? நல்ல காலம் பள்ளி வாசல் நினைவாக "பள்ளிவாசல் அணை" அல்லது "பள்ளிவாசல் கரை" என்றப் புதுப்பெயர் இன்னும் அவ்விடத்துக்கு சூட்டப்படவில்லை. இன்று இவ்விடத்தில் பெரிய கட்டிடம் கட்டப்பட்டு அன்னதானம் கொடுக்கப்படுகிறது.







# மரபுக் கதை 2

# வீரமகா காளியம்மன்

வீரமகாகாளி அம்மன் கோயில் யாழ்ப்பாணத்
1591 ம்ஆண்டு ஒக்டோபர் மாதம் போர்த்துக்
நல்லூர் கந்தசாமி கோயிலில் இருந்து பருத்தி
1478ல் கனகசூரியனுக்கு பின் அவனது முதற்
வீரமகாகாளியம்மன் கோயில் சரித்திர வரலா
அபிராமி பட்டர் கதை போன்று வீரமகாகாளி
பூசாரி குடிப்பதைப் பற்றி அரசனிடம் பலர் மு
அன்று என்ன திதி என்பது அவருக்கு உடனே
“ஓகோ அப்படியா. சரியாகத் தான் சொல்கிறீ
“ஆமாம் மன்னா” என்றார் பூஜாரி
“சரி இன்றிரவு நான் வருவேன். நீர் சொல்வ
மன்னன் சென்ற பின் பூசாரி மது போதை
“அம்மா என்னைக் காப்பாற்று. உனக்குத் தின
” மந்திரி. இதெப்படி நடக்கும். இன்று அமாவ
“வாரும் மன்னா. அம்மன் சன்னதிக்குப் போ
சைவ பூசாரிகளால் பூசைகள் செய்யப்பட்டன



## மரபுக் கதை 3

# வைரவர்மலை இரகசியம்

1469ம் ஆண்டு முதல் 1815 ம் ஆண்டு வரை

கண்டி இலங்கையின் மலைநாட்டு இராச்சியத்தின் தலைநகரமாக விளங்கியது. கடல்மட்டத்துக்கு 1629 அடி உயரத்தில் உள்ள இந்த நகரத்தைப் போர்த்துக்கேயரும், ஒல்லாந்தரும் கைப்பற்றமுடியாது போயிற்று. ஆனால் பிரித்தானியாகள். சூழ்ச்சி செய்து மன்னருக்கு அதிகாரிகளாக கடமையாற்றிய துரோகிகளின் உதவியுடன். 1815ல்; கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றியதாக வரலாறு கூறுகிறது. கண்டி இராச்சியத்தை ஆண்ட கடைசி மன்னன் ஸ்ரீ விக்கிரமராஜசிங்கன். அம்மன்னன் நாயக்கர் பரம்பரையைச் சேர்ந்த தமிழ் மன்னன். இம்மன்னனின் நான்கு அதிகாரிகள் பிரித்தானியரிடம் சரண்அடைந்த போது கண்டியில் பிரித்தானியர்களோடு செய்து கொண்ட உடன்படிக்கையில் தமிழிலில் மட்டுமே பத்திரத்தில்

கையொப்பம்மிட்டார்கள். அவனோடு சில அதிகாரிகளும் தமிழில் கையொப்பமிட்டனர். இதன் பிரதி இன்றும் கொழும்பு நூதனசாலையில் உண்டு.

கண்டி நகரம் ஒரு காலத்தில் செங்கடகல என்ற பெயரில் திகழ்ந்தது. "செங்கட" என்ற துறவி அங்கு மலை யொன்றில் வாழ்ந்ததினால் அப்பெயர் வந்ததென்பர். ஆனால் காலப்போக்கில் "மகாநுவர" என்ற சிங்களப் பெயரில் அந்நகரத்தை சிங்களவர் அழைக்கத் தொடங்கினர். மகாநுவர என்பது மேன்மைவாய்ந்த நகரம் என்பதாகும். ஆனால் மலைகள் சார்ந்த நகரமாகையால் கண்டி என்ற பெயர் "கந்த" என்பதில் இருந்து தோன்றியது என்பது பலரது கருத்து. சிங்களத்தில் கந்த என்றால் மலை என்பது அர்த்தமாகும். "கந்தன்" முருகனைக்

குறிக்கும். குன்றத்தில் இருக்கும் கந்தனுக்கும் கந்தவுக்கும் தொடர்புண்டு.

பைரவர் காட்டுக்குத் தெய்வமல்ல. கிராமத்தின் காவல் தெய்வமாகவும் பாதாள உலகத்தில் உள்ள போக்கிஷத்தைக் காப்பவராக இலங்கையில் சிங்கள மக்கள் வைரவரை கருதுகிறார்கள். இலங்கையில் பைரவர் வழிபாடு தமிழ், சிங்கள மக்களிடையே பொதுவான வழிபாடாகும். வைரவருக்குப் பொங்கல், வடைமாலை, பலி பொன்ற சடங்குகள் வடபகுதியில் மக்களால் கடைபிடிக்கப்பட்டு வந்தாலும் காலப்போக்கில் வைரவர் கோயில்களில் ஆடு, சேவல், பலி கொடுப்பது முன்னேஸ்வரம் காளி கோயிலில் பிரச்சனை உருவாக முன்னரே நிறுத்தப்பட்டுவிட்டது. பெரும்பாலும் வைரவர் கோயில்கள்

தோற்றத்தில் சிறியவை. சூலத்தை சின்னமாக பாவித்து பைரவரை வணங்குவார்கள். சிவனின் கோப நிலையே பைரவர் என்கிறது ஐதீகம்.

இந்த தெய்வத்தின பெயரில் கண்டி நகரத்தில் வைரவர் மலை என்றுண்டு. அம்மலையில் முக்காலத்தில் இலங்கையில் வாழ்ந்த இயக்கர்களால் போக்கிஷங்கள் புதைக்கபட்டிருப்தாகவும் அதை காக்க வைரவர் அங்கு குடியிருப்தாகவும் பலரின் நம்பிக்கை. அம்மலையில் அக்காலத்தில் முற்பதர்களும் அடர்ந்த செடிகளும் நிறைந்து இருந்தன. சிறுத்தை, நரி. கரடி. ஓநாய் போன்ற வனவிலங்குகள் அங்குவாசம் செய்ததினால் மக்கள் அப்பகுதிக்குப் போக அஞ்சினர். வைரவர் வழிபாட்டினை கண்டி இராச்சியத்தை ஆண்ட நாயக்கர் மன்னர்கள்

கடைப்பிடித்து வந்ததால் இம்மலை சரித்திர வரலாறு பெற்றது.

கிரேக்க தேசத்து அட்லஸ் தெய்வத்தைப் போன்று வைரவர் தெய்வம் கருதப்பட்டது. வருடா வருடம்; பைரவருக்கு நரபலி கொடுப்பது அவசியம், இல்லையேல் தெய்வத்தின் கோபத்துக்கு ஆளாக வேணடிவரும் என்ற பயம் அக்கால கண்டி இராச்சிய மக்களிடம் இருந்தது. அவர்கள் பௌத்தர்களாகயிருந்தாலும் பத்தினி தெய்யோ, ஸ்கந்த தெய்யோ, வைரவ தெய்யோ, விஷ்ணு தெய்யோ என இந்துக் கடவுள்களையும் வணங்கிவந்தனர். இதற்கு அவர்களை ஆண்ட மன்னன் பிறப்பில் இந்துவாக இருந்ததே காரணமாகும். வைரவருக்கு நரபலி கொடுக்காவிட்டால் பருவகாலங்கள் பாதிக்கப்பட்டு

மழையில்லாது வரட்சி ஏற்படும் என கண்டி இராச்சியத்தில் வாழ்ந்த விவசாயிகளின் நம்பிக்கை. வைரவர் மலை, கண்டி இராச்சியத்துக்கு அன்னியரின் தாக்குதலில் இருந்து பாதுகாப்பு அளித்து வந்தபடியால் அப்பாதுகாப்பினை பைரவரே வழங்கி வந்தார் என எல்லோhரும் நம்பினர். சுமார் 500 வருடங்களுக்கு மேலான வரலாற்றினை இம்மலை கொண்டுள்ளது. சுமார் 650 அடி உயரமுள்ள இம்மலை இன்று கண்டி நகரத்திற்கு செல்லும் எல்லோரினதும் பார்வையிலும் அம்மலை உச்சியில் உள்ள 80 அடி வெள்ளை நிற புத்தர் சிலை தான் தென்படும்.

இம்மலை பற்றிய குறிப்பு 17ம் நூற்றாண்டில் அஸ்கிரி தல்பொத்த என்ற ஏட்டுச்சுவடிகளில் எழுதப்பட்டுள்ளது.

கண்டி இராச்சியத்தை உருவாக்கிய விமலதர்மசூரிய என்ற மன்னன் போர்த்துக்கேயரின் தாக்குதலில் இருந்து கண்டியைக் காப்பாற்ற காவல் கூண்டுகளை பல பகுதிகளில் அமைத்தான். அதில் வைரவமலை முக்கியயிடம் வகித்தது. அம்மன்னனுக்குப் பின்னரும் இராச்சியத்தின் பாதுகாப்புக்கு மலை பாவிக்கப்பட்டது.

ஸ்ரீ விக்கிரமராஜசிங்கன் ஆட்சிகாலத்தில் அவனது ஆட்சிக்கு எதிராகப் பல அதிகாரிகள் பிரித்தானியருடன் சேர்ந்து சதி செய்ய ஆரம்பித்தனர். மக்கள் மனதில் பீதியை உருவாக்க வைரவருக்கு பலி கொடுக்கும் சடங்கினை மன்னன் அறிமுகப் படுத்தினான். வைரவருக்க கொடுக்க வேண்டிய பலி கொடுக்கப்படாததால் இராச்சியத்துக்கு ஆபத்து வந்துவிட்டது

என்ற வதந்தி பரவத் தொடங்கியது. அக்காலத்து பௌத்த சிங்கள மக்கள் இந்து மதக் கடவுள்களான கண்ணகி அம்மன், விஸ்ணு, ஆகிய தெய்வங்களை புத்தரோடு சேர்த்து விகாரைக்களில் வணங்கியதால் இந்து சடங்கு முறைகளை அவர்கள் பின்பற்ற எதிர்ப்பு தெரிவிக்கவில்லை.

பலியிடும் சடங்கு ஆரம்பிப்பதற்கு இராணியே காரணமாகும். பிள்ளையில்லாத மலடியான இராணியின் கனவில் வைரவரைக் தான் கண்டதாகவும் தனக்கு நரபலி கொடுத்தால் குழந்தை பிறக்குமென மன்னனுக்கு இராணி சொன்னாள். குறிக்காரர் ஒருவரிடம் ஆலோசனை கேட்டபோது இராஜ இரத்தம் ஓடும்; கன்னிப் பெண் ஒருத்திக்குப் பூஜை செய்து,

மலையடிவாரத்தில் கொண்டு போய் பலி கொடுத்தால் குற்றம் அகலும் என்றான் குறிக்காரர். அதன்படி ஒரு கன்னிப் பெண்ணைத் தேடிப் பிடித்து பூஜைகளுக்குப் பின் ஒரு இரவு மலைக்கு அழைத்துச்சென்று அங்குள்ள காட்டு மரம் ஒன்றில் கட்டிவிட்டு வீடு திரும்பினார். அடுத்தநாள் போய் பார்க்கும் போது அப்பெண்ணின் உடல் கிழிக்கப்பட்டு இறந்து கிடந்தாள். வைரவர் தனது பசியைத் தீர்த்துவிட்டார் என்று மக்கள் நம்பினர். ஆனால் உண்மையில் மலையடிவாரக் காட்டில் இருந்த வன விலங்குகளுக்கு அப்பெண் பலியானது பலருக்கு தெரியவில்லை. பைரவர் மலையின் இரகசியம் பலருக்குப் புதிராக இருந்தது. ஏன் கன்னிப் பெண் ஒருத்தியை பலிகொடுப்பதற்கு தேர்ந்தெடுக்கப் படவேண்டும் என்பது பலருக்கு

விளங்கவில்லை.

ஒரு ஆண்டு, திடீரென கண்டி இராச்சியத்தில் வரட்சி ஏற்பட்டதால் பலி கொடுக்கும் சடங்கு முறை தீவிரம் அடைந்தது. இந்த சடங்கினை சரிவர செய்யும் பொறுப்பு துணவில என்ற அதிகாரி; ஒருவனுக்கு கொடுக்கப்பட்டது. இவனோ பெண் ஆசைகொண்டவன். ஒழுக்கமில்லாதவன். தான் ஒரு அரச கவி என்ற பிரமையை மக்களிடையே உருவாக்கி மன்னனின் நல் மதிப்பைப் பெற்றவன். இராச சபையில் இருந்து ஒரு அழகிய கன்னிப் பெண்ணை தெடிப்பிடித்து வரும் படி துணவில தன் ஆட்களை அனுப்பினான். தங்களுக்கு எதிரிகளானவர்களை பழி தீர்க்கும் முகமாக அவர்கள் குடும்பத்தில் உள்ள ஒரு

பெண்ணைத் தேர்ந்தெடுத்து வந்து பலி கொடுப்பார்கள். இப்படி தேர்ந்தெடுக்கப் பட்ட பெண் மன்னனுக்கு முன் அழைத்துச் செல்லப்பட்டாள். அவளைக் குளிப்பாட்டி, ஆடை ஆபரணங்கள் அணிந்து, வைரவ மலைக்கு கூட்டிச்சென்றனர்.

அந்த அழகியப் பெண்ணின் மேல் ஆசை வைத்தான் துணிவில. மலையில் மரம் ஒன்றில் பெண்ணை கட்டிப்போட்டு காவல்காரர்கள் திரும்பியவுடன் துணிவில இரகசியமாக அன்றிரவு மலைக்குப்போனான். இந்த முறையையே அவன் முன்னரும் கன்னிப் பெண்களைக் கற்பழிக்க பாவித்தது பலருக்குத் தெரியாது. அங்கு வந்த துணவல, அப் பெண்ணை கற்பழிக்க முயன்றபோது விறகு வெட்டி போன்று வேடம் போட்டு, அப்பெண்ணை

காப்பாற்ற அவளைத் தேடி வந்த அவளின் காதலன் கண்டு விட்டான். துணவல பெண்ணினது காதலனின் கத்திக்கு இரையானான். பெண்ணை காப்பாற்றி, அவளுடன் கொழும்புக்கு ஓடித்தப்பினான் காதலன்.

மறுநாள் துணவில மலையில் இறந்து கிடந்த செய்தி மன்னனை அடைந்தது. அவன் இறந்த காரணத்தை மன்னன் அறிய அதிக நேரம் எடுக்கவில்லை. அவனைப்பற்றிய விபரம் பின்னரே மன்னனுக்குத் தெரியவந்தது. 1815ம் ஆண்டு பிரித்தானியர் இராச்சியத்தை கைபற்றிய பின்னர் அப்பெண்ணும் கணவனும் நிம்மதியாக கண்டி இராச்சியத்துக்கு திரும்பினர்.

சென்ற நூற்றாண்டின் மத்தியில் மலையில்

உள்ள காடுகளைத் துப்பரவு செய்து அங்கு புத்தர் கோயிலையும் 80 அடி உயர புத்தர் சிலையையும் அம்பிட்டிய தாமானந்த என்ற புத்த பிக்கு ஸ்தாபித்தார். பைரவ மலையின வரலாற்று தொடர்பினை அங்கு வளர்ந்த உயர்ந்த மரங்களே நினைவூட்டிவையாய் இருந்தன. இப்போது உல்லாசப் பயணிகள் தங்குவதற்காக ஹோட்டல்கள் பல அப் பகுதியில் தோன்றி விட்டன.





## மரபுக் கதை 4

புத்தளம் கொழும்பிலிருந்து வடக்கே, மேற்கு

“எத்தளம் போனாலும் புத்தளம் போகாதே,

தமிழ் நாட்டில் உள்ள தூத்துக்குடியிலும், கீழ

நான் புத்தளத்தில் சகிராக் கல்லூரியில் 1950ம்

“அடேயப்பா! இந்தப் பெரிய வீட்டில் எத்த

“எனக்கே அவ்வளவுக்கு அந்தவீட்டைப்பற்றித்
ஒருகாலத்தில் கடலில் மரக்கலங்களில் இந்திய
“வீட்டைப் பார்த்தால் ஒரு பேய் குடிபுகுந்த வீ
“சரியாகச் சொன்னாய்!
... அவரைப் பேய்வீட்டு மரக்காயர் என்று தா
“என்ன?
... கொலை செய்யப்பட்டாரா? யாரால்? எதற்
“இவ்வீட்டின் உரிமையாளரான மஜீத் மரக்கா
“எதற்காக?!”
“வேறு எதற்காக? எல்லாம் சொத்துக்காகத்தா
“இவ்வளவு சொத்தையும் யார் சேர்த்தது? தற்
“இல்லை!
... இவரின் பாட்டானாருக்கு ஒரு புதையல் கி
“கேட்க ஒரு சுவாரசியமான கதை போல் இரு
... அல்லது நீ எனக்கு ரீல்விடுகிறாயா?”
“என் பாட்டி பொய் சொல்லமாட்டா... அவ எ
“முழுக்கதையும் எனக்குச் சொல்லேன்... எனக்
ரசீட்டும் தனது கற்பனை கலந்த பேய்வீட்டு ம

*******

“கிட்டத்தட்ட நூறு வருடங்களுக்கு முன், அத
பெண்ணோ காசாசைப் பிடித்தவள், ஆனால்
... எனக்கோபமாகக் கேட்டாள்.

காதருக்கு உண்மையை மறைக்க முடியவில்லை
பண ஆசை பிடித்த அவள் “இதற்கேன் யோசி

“நல்ல பேராசைக்கார மனைவி! காதர் அவள்

“செய்யாமல் இருக்க மனைவி விடுவாளா?

... ஒருத்தருக்கும் தெரியாமல் அன்றிரவே மனை

“அடுத்த நாள் காலை என்ன நடந்தது? சொல்

“காதர் அடுத்த நாள் காலை போய் பார்த்தபே

“என்ன!

... பேயைக் கனவில் கண்டாயா? என்று காத

“என்ன நீ உண்மையைத்தான் சொல்லுகிறாய

“ஆமாம்! இங்கிருந்து வடக்கே ஐம்பது யார் க

“ரசீட்! அவர்களுக்குப் புதையல் கிடைத்ததா?”

“புதையல் கிடைக்காமலா இந்தப் பெரிய வீடு

“அப்போது! அந்தப் பேராசைக்கார மனைவிக்கு

...

“*பாவம் அவளுக்குப் பேய் மூலம் கிடைத்த செ*

“*என்ன ரசீட் சொல்கிறாய்?!*... *பிறந்த பிள்ளை*

“*நானும் முதலில் நம்பவில்லை தான். அவள் மு*

“*அப்போ மரக்காயரின் தகப்பனுக்கு வால் இரு*

“*அமாம்! இது மருத்துவிச்சி சொன்னதைக் கே*

*ரசீட் சொன்ன கதையை நம்புவதா? இல்லைய*

.



# மரபுக் கதை 5 - உடப்பூர் கதை



மரபுக் கதை 5

# உடப்பூர் கதை

ஊருக்கு ஊர் மரபு வழி வந்த கதைகள் ஏராளம். அக்கதைகள் பெரும்பாலும் அவ்வூரில் நடந்த சம்பவத்தை அல்லது கோயிலை அல்லது பகுதியின் பெயரை அல்லது அவ்வூரில் ஓடும் ஆற்றின் பெயருடன் தொடர்புள்ளதாகயிருக்கும். உடப்பு என்றவுடன் நம் நினைவில் வந்து நிற்பது தீக்குளிப்பு திருவிழாவும், கரப்பந்தாட்டமுமே. உடப்பு கிராமம், வடமேல் மாகாணத்தில், கொழும்பு புத்தளம் வீதியில் பத்துளு ஓயாச்சந்தியிலிருந்து வடமேற்காக 4 மைல் தூரத்தில் இந்து சமுத்திரத்தின் கரையோரத்தில்

அமைந்துள்ளது. ஏறக்குறைய 3000 குடும்பங்கள் இவ்வூரில் வாழ்கின்றன. இங்கு வாழ்பவர்கள் பெரும்பாலானோர் இந்து மதத்தைச் சேர்ந்த தமிழ் மக்கள். இவ்வூரின்; தெற்கே குறுமண்கழி என்ற கடலுடன் தொடர்பற்ற உப்புநீர் நிறைந்த அளமும். கிழக்கே ஒல்லாந்தரின் வெட்டுவாய்க்காலும், வடக்கே இவ்வூரார் வாழும் ஆண்டிமுனைக் கிராமமும். மேற்கே இந்து சமுத்திரமும் காணப்படும். கொழும்பையும் புத்தளத்தையும் இணைக்கும் நீர்பாதையாக ஒல்லாந்தரின் வெட்டுவாய்க்கால் அமைந்துள்ளது. முற்காலத்தில் சரியான பாதைபோக்குவரத்து இல்லாத காரணத்தால் இவ்வாய்க்கால் வர்த்தகப் பொருட்கள் கொண்டு செல்லப் பயன்படுத்தப்பட்டது. ஊருக்கு ஒரு மைல் தூரத்தில் உள்ள ஆண்டிமுனையில், கடற்கரையோரத்துக்கு

அன்மையில் நன்னீர் ஊற்றுகளும் குளிக்கும் கிணறுகளுமுண்டு. இவ்வூருக்கு அண்மையில் உள்ள பத்துளு ஓயாவென்ற ஆற்றின் முனையில் உள்ள மண்ணை நீக்க உடைப்பு ஏற்படுத்தி ஆற்றின் வெள்ள நீர் கடலுக்குபாச்சுவதன் மூலம் புத்தளம் முதல் ஆனைவிழுந்தாவ பிரதேசங்கள் வரையுள்ள பகுதிகள் வெள்ளத்தில் மூழ்காமல் காப்பாற்றப்படுகின்றன. ஆற்றின் முனையில் உள்ள உடைப்பே பின் மருவி உடப்பாகியதென்பது பலர் விளக்கம்.

உடப்பு மக்கள் குடியேறிய இடத்தில் காடுகள் நிறைந்திருந்தன. தமிழ் அகராதியில் உடப்பு என்ற சொல்லுக்கு “தொரட்டு முற்காடு “என இருக்கிறது. முன்னைய காலத்தில் வெள்ளம் தானாக உடைத்து பாய்வதால் அவ்விடத்தை உடைப்பு என்றும்

*பின் அது மருவி “உடப்பு” என பெயர்பெற்றிருக்கலாம். இது பொறுத்தமான பெயர் என்று கூறுவதற்கில்லை. ஏனெனில் வெள்ள நீரை வெட்டிபாயச்சுவதற்கு இன்றும் “அறுவாய்” வெட்டுதல் என்றுதான் அழைப்பர்.*

*உடப்பு மக்கள் தென்னிந்திய மறவர் குல மக்களின் பரம்பரை எனக் கூறப்படுகிறது. இவர்கள் நெய்தல் நில மக்கள். செம்பலிங்க உடையார் தன் குறிப்பொன்றில் பின் வருமாறு கூறியுள்ளார். 1664ம் ஆண்டு தென்னிந்தியாவை முஸ்லீம்கள் ஆட்சிசெய்தபோது. 16ஆம் நூற்றாண்டில் மதுரை மங்கம்மாவுக்கும் இராமநாதபுரம் இராசாவுக்குமிடையே போர் மூண்ட நேரம் மதமாற்றத்துக்கு பயந்து 18 குடும்பங்கள் 12 வள்ளங்களில் புலம் பெயர்ந்து கற்பிட்டி*

ஆனவாசல் முதல் கலாஓய வரை குடியேறினர் இவர்கள் வீரமிக்க திடகாத்திரமான மக்கள். மன்னாருக்கும் புத்தளத்துக்கும் இடைப்பட்ட பகுதி ஒரு காலத்தில் செழித்து திகழ்ந்தது. தென்னிந்தியாவில் இருந்து வந்து குடியேறிய இவர்கள் தங்கள் குல தெய்வம் ஸ்ரீ திரௌபதையம்மனுக்கு கோயில் அமைத்து வழிபட்டனர். மீன் பிடித்தலும் முத்துக்குளித்தலும் இவர்கள் தொழில். உடப்பில் திரௌபதையம்மன், காளியம்மன் முத்துமாரியம்மன், ஸ்ரீ ஐயனார் ஆகிய தெய்வங்களுக்கு கோயில் அமைத்து வணங்கத் தொடங்கினர். ஸ்ரீ திரௌபதையம்மன் ஆலயம் அமைந்துள்ள இடத்துக்கு மேற்கே மாங்குண்டு என்றழைக்கப்படும் இடம் உண்டு.

குருகுல வழிவந்த வர்ணகுலவாசிகளான இவ்வூர்வாசிகள் ஆழ்கடலுக்குச் சென்று மீன் பிடிதொழிலையே நம்பி வாழும் கரவர்கள். இவர்களது குலத் தலைவனுக்கு கமலக்கன்னி என்ற பெயருடன் ஒரு அழகிய மகள் இருந்தாள். அவள் அழகில் சொக்கி பலர் பெண் கேட்டு வந்தனர். அதற்கு குலத்தலைவன் தன் மகளுக்கு ஏற்ற கணவன் கிடைக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் கேட்டுவந்த பலருக்கு மறுப்பு தெரிவித்து அனுப்பினான். மறவர் குல தலைவன் ஒருவன் கமலக்கன்னியின் அழகைப் பற்றி கேள்விப்பட்டு பெண் கேட்டு தூது ஆனுப்பினான்.

“மறவர்கள் என்றாலே சண்டைக்குப் பெயர் பெற்றவர்கள் இவர்களுக்கு நான் எவ்வாறு என்மகளை கொடுக்க முடியும். கிளியை

வளர்த்து பூனை கையில் கொடுப்பது போல் அல்லவா நான் அவளை மரவனுக்குத் திருமணம் செய்துவைத்தால் இருக்கும்” என மறுப்பு தெரிவித்தான் கரவர் குல தலைவன்.

ஆனால் மறவர் தலைவன் தன் முயற்சியை விடவில்லை “உன் மகளை எனக்குத் துணையாக்காவிடில் அதனால் உன் குலத்திற்கு ஏற்படும் அழிவிற்கு நீயே பொறுப்பு என பயமுறுத்தினான். மரவர் தலைவன்.

ஏன் என் மகளால் என் குலமக்கள் பாதிக்கப் படவேண்டும் என்று யோசித்த கமலக்கன்னியின் தந்தை ஒருவாறாக மகளின் திருமணத்துக்கு ஒப்புதல் கொடுத்தான். அந்தக் கால வழக்கத்தின் படி கலியாணத்திற்கு பந்தல் கால்களையும் நட்டு திருமண மண்டபத்தையும் அமைத்தான்.

மணமகன் திருமணத்திற்கு வரும் முதல் நாளே தன் மகளுடனும் தனது மக்களுடனும் அவ்வூரைவிட்டு ஓடி மறைந்தான். திருமணத்துக்கு வந்த மரவர் தலைவனுக்கு ஏமாற்றம் காத்திருந்தது. பெண்ணுக்கு பதிலாக ஒரு பெண் நாயை மணப்பந்தல் காலில் கட்டியிருந்ததை கண்டு படு கோபமுற்றான். தனக்கு எற்பாட்ட அவமானத்தை நினைத்து படு கோபம் அடைந்தான். கமலக் கன்னியைத் தேடி போன மறவர் தலைவனுக்கு திரும்பவும் ஒரு ஏமாற்றமே காத்திருந்தது. மறவர் தலைவன் தனது படையுடன் வர முன்னரே கமலக்கன்னியை அவளது சம்மதத்துடன் கடலில் மூழ்கடித்து அவளது உயிரைப் போக்கினார் அவளது தந்தை. அவ்வாறு கடலன்னைக்கு கற்பைக் காப்பதற்காக பலிகொடுக்கப்பட்ட கமலக் கன்னியே

கரவர் குல மக்களின குல தெய்வமாக வணங்கப்பட்டாள். இது போன்று வேறு ஒரு கதையும் உண்டு.

புத்தளம் பிரதேசத்தில் முக்குவர் இனத்தவர்கள் பிரசித்தமாக இருந்த காலமது. வட பகுதியல் வேதியரசன் என்பவன் முக்குவ தலைவானாகயிருந்தான். இவனே நெடுந்தீவின் மேற்குப்பகுதியான கோட்டைக்காடு என்ற இடத்தில ஒரு காலத்தில் இராசதானியமைத்து பிரதானிகள, படைவீரர்களுடன் ஆட்சி செய்தவன். இவ்விடம் இப்போது “கட்டக்காடு என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. முஸ்லீம்கள்; பெரும்பாலோர் இவ்வூரில் வாழ்கிறார்கள். பின்னர் அங்கீருந்து விரட்டப்பட்டு புத்தளத்துக்கு வடக்கேயுள்ள குதிரைமலைப் பகுதியில் அரசாண்டவன். புத்தளத்தின்

தெற்குப்பகுதியல் உடப்பு உற்பட கரவர்களுக்கு தலைவானாக மாணிக்கத்தலைவன் இருந்தான். வேதியரசனுக்கும் மாணிக்கத் தலைவனுக்டகுமிடையே பலகாலமாய் பகையிருந்து வந்தது. மாணிக்கத் தலைவன் தன் மகளை வேதியரசனுக்கு மணமுடித்து வைக்க தூது அனுப்பிய போது, வேதியரசன் மறுப்புத் தெரிவித்தான். அதனால் இரு பகுதிகளும் மோத வேண்டிய நிலை ஏற்பட்டது. அந்நேரம் முக்குவரின் படைப் பலம் குறைவாக இருந்தபடியால் குதிரைமலை பகுதியில் குதிரை வியாபாரத்துக்கு வந்திருந்த அரேபியர்களின் உதவியை அவன் நாடினான். அதற்கு உடன்பட்ட அரேபியர் முக்குவர்களுடன் சேர்ந்து கரவர்களுடன் மோதினார்கள். உடப்பூருக்கு அருகாமையில் உள்ள மங்கள

வெளிக்கும் கட்டக்காடு என்ற கிராமத்துக்கும் இடையே இருந்த சமவெளியில் யுத்தம் நடந்தது. இப்போரில் மாணிக்கத்தலைவன் கொல்லப்பட்டான். அவனைப் புதைத்த இடத்திற்கு அருகே ஒரு கறையான் புற்றிருந்தது. அப்புற்றை மாணிக்கன் புற்று என இப்போதும் அழைக்கின்றனர். இப்போரில் முக்குவர் பெரும் வெற்றியடைந்தனர். அரேபியருக்கு நன்றிக் கடனாக முக்குவர் அனைவரும் இஸ்லாம் மதத்தை தழுவினர். ஆனால் பின்னர் போர்த்துக்கேயரின் வருகைக்குப் பின்னர் அவர்களின் நன்மதிப்பையும் அவர்கள் கொடுத்த சலுகைகளையும் பெறுவதற்காக பல முக்குவர்கள்; கத்தோலிக்கராக மாறினார்கள்.

பூதத்தம்பி கதை நாடகமாக பல தடவை மேடை எறியுள்ளது. சங்கிலியன், பண்டார வன்னியன் போன்ற சரித்திர வரலாற்று நாடகம் போன்று பிரபல்யமான நாடகமது. டொன் லூயிஸ் பூதத்தம்பி என்பவர் கைலாய வன்னியனின் சகோதரியை மணம் முடித்தவர்.

அக்காலத்தில் பெரும் பதவிகளில் உள்ளவர்கள் அவசியம் மதம் மாறி கிறிஸ்தவர்களாக இருந்தாகவேண்டும் என்பது ஒரு காலத்தில் அட்சியில் இருந்த ஒல்லாந்து அரசின் நியதி.

ஒல்லாந்தர், போர்த்துக்கேயர்களிடமிருந்து யாழ்ப்பாண ஆட்சியைக் கைப்பற்ற பூதத்தம்பி என்ற வேளாளனும் அந்திராசி

*கரையார் (குரு குல தலைவனும்) பெரிதும் துணைபோனார்கள். அவர்கள் செய்த உதவிக்கு பிரதி உபகாரமாக ஒல்லாந்தர் தாம் ஆட்சி செய்ய ஆரம்பித்த போது சிறைப்பகுதிக்கு பூதத்தம்பியையையும். நிர்வாகப் பகுதிக்கு அதிகாரியாக டொன் மனுவேல் அந்திராசியையும் அதிகாரிகளாக 1658 இல் நியமித்தனர். அவர்கள் இருவருக்கும் முதலி பட்டம் வழங்கப்பட்டு மந்திரிகள் போல் சகல அதிகாரங்களும் கொடுக்கப் பட்டது.*

*பூதத்தம்பி முதலியும் அந்திராசியும் உற்றாண்மை நண்பர்கள். ஒரு நாள் தனது மாளிகையில் தான் நடத்திய விருந்தொன்றுக்கு தன் நண்பன் அந்திராசியை விருந்தினராக வரும்படி அழைத்திருந்தான் பூதத்தம்பி. பெண்கள்*

விஷயத்தில் அந்திராசியின் பெலவீனம் அவ்வளவுக்கு பூதத்தம்பிக்கு தெரிந்திருக்கவில்லை. தன் நண்பனுக்கு ஓர் அறையில் தனிமையாக போசனம் படைப்பித்து இரு ஏவலாளர்களை அவனுக்கு வேண்டியதைச் சரிவரக் கவனிக்கும் படி கட்டளையிட்டு மற்றைய விருந்தினர்களைக் கவனிக்கச் சென்றான் பூதத்தம்பி. பூதத்தம்பியின் மனைவி அழகவல்லி பெயருக்குகேற்ற அழகான தோற்றமுள்ளவள். வன்னியர் குலத்தவள். அவளது அழகே கணவனின் உயிருக்கு ஆபத்தாக அமைந்தது.

விருந்து நடந்த தினத்தன்று விருந்தினர்கள் சரியாக உபசரிக்கப் படுகிறார்களா என்பதைக் கவனிக்கும் எண்ணத்தோடு மேற்பார்வை செய்து கொண்டு போகும்

போது அந்திராசி உணவருந்திக் கொண்டிருக்கும் அறைக்குள் அழகவல்லி சென்றாள். உணவு பரிமாறுபவர்களை அழைத்து குறைவில்லாமல் அந்திராசிக்கு உணவு, உண்டிவகைகளை படைக்கும் படி கட்டளையிட்டுப் போனாள்.

அந்திராசிக்கு பெண்கள் மேல் எப்போதும் சபல மனம். அதுவும் அழகிய பெண்கள் என்றால் கேட்கவும் வேண்டுமா? பிறர் மனைவியைத் தன் தாயைப் போல் மதிக்கும் குணம் அற்றவன் அந்திராசி. அழகவல்லியின் முகத்தழகையும் உடலகையும், நடையழகையும், கவர்ச்சியான பார்வையையும், குரலழகையும் கண்ட அந்திராசி மெய்மறந்து போனான். தன் நண்பனுக்கு இப்படி ஒரு அழகிய மனைவி இருக்கிறாள் என்பது அவனுக்கு அப்போது

தான் தெரியவந்தது. பார்த்ததும் அவள் மேல் அவனக்குத் தணியாக் காதல் ஏற்பட்டது. அவளுடன் எப்படியும் உடலுறவு வைத்தாக வேண்டும் என்ற எண்ணம் அத்தீயவன் மனதில் தோன்றிற்று. அருந்திய விருந்தெல்லாம் அவனுக்கு வேம்பாயிற்ற. பரிசாரகர் கேட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லாது அவனது எண்ணம் எல்லாம் வந்து சென்ற அழகவல்லி மேல் இருந்தது. சற்று நேரத்துக்குப் பின்னர் சுய நினைவுக்கு வந்த அந்திராசிக்கு மேலும் உணவு உண்ண விருப்பமிருக்கவில்லை. கைழுவியபின்னர் பூதத்தம்பியோடு சற்று உரையாடி, அதன் பின்னர் தாம்பூலம் தரித்து வீடு திரும்பினான். திரும்பும் வழியில் அவனது சிந்தனைகள் எல்லாம் அழகவல்லிமேல் இருந்தது.

வீடு திரும்பிய அந்திராசி பூதத்தம்பியின் மனைவி அழகவல்லிக்கு விலையுயர்ந்த பரிசுகள் வழங்கத் திட்டமிட்டான். தங்கக் காசுகளையும், வாசனைத் திரவியங்களையும், பட்டுப் பட்டாடையும். ஒரு சந்தனப்பெட்டியில் வைத்து "இதனைக் கொண்டு போய் பூதத்தம்பியின் மனைவி அழகவல்லியிடம் எவருக்கும் தெரியாதவாறு நான் தந்ததாக கொடுத்துவா. அதோடு அவளை நான் சந்தித்து உறவாடு ஏற்ற காலமெது என்றும் அறிந்து வா" என தூதுவனிடம் சொல்லிக் கொடுத்தனுப்பினான் அந்திராசி. தூதுவனும். பூதத்தம்பி இல்லாத சமயம் பார்த்து அழகவல்லியைச் சந்தித்து பரிசுகளைக் கொடுத்து அந்திராசியின் விருப்பத்தைத் தெரிவித்தான். அழகவல்லி அதைக் கேட்டு கடும் சினம் கொண்டாள். அந்திராசிக்கு ஒரு

பாடம் படிப்பிக்க எண்ணி தூதுவன் கொண்டு வந்த தாம்பாளத்தில் ஒரு செருப்பை வைத்து இதனை அந்தப் பாதகனுக்கு என் பரிசெனக் கொடு என்று கண்டித்து அனுப்பினாள்.

தூதுவன் திரும்பி வந்து சொன்ன செய்தியையும் கொடுத்த செருப்பையும் கண்ட அந்திராசி சினம் கொண்டான். “எனது அதிகாரம், எனது குணம், எனது பலம், தெரியாது இவள் என்னை அவமானப் படுத்திவிட்டாள். இவளுக்கு நான் நல்ல பாடம் கற்பிக்கிறேன்” என மனதுக்குள் கறுவிக்கொண்டான் அந்திராசி. அவள் செருக்கை அடக்கச் சமயம் பார்த்திருந்தான்.

நடந்ததை கணவனுக்குச் சொல்லி அந்திராசிக்கும் பூதத்தம்பிக்கும்

இடையேயுள்ள நற்பை பகையாக்கி பிரச்சனையைப் பெரிதாக்க அழகவல்லி விரும்பவில்லை.

இந்த சம்பவம் நடந்து சில தினங்களில் அந்திராசி திட்டம் போட்டு பூதத்தம்பியடம் போய் வெறும் காகிதம் ஒன்றை நீட்டி "கச்சாய் துறைமுகத்திற்கு சில மரக்களங்களுக்கு கட்டளையனுப்பவேண்டும். மரக்களங்கள் எத்தனை என்று கணக்கெடுத்து உடன் வாசகம் எழுதிக் கொள்வேன். பின்பு உமக்கு நேரமிருக்காது. இந்த வேற்றுக் காகிதத்தில் உமது கையொப்பமிட்டுத் எனக்குத் தாரும். உடனே நடவடிக்கை எடுக்க உதவியாக இருக்கும்". என்றான். பூதத்தம்பி தன் நண்பன் மேல் வைத்திருந்த நம்பிக்கை காரணமாக அவன் நீட்டிய

வேற்றுப் பத்திரத்தில் கையெழுத்திட்டு கொடுத்தான் பூதத்தம்பி. அந்திராசி தனது பழிவாங்கும் திட்டத்தை முடிக்க முதல் படி தாண்டியாகிவிட்டது என நினைத்தவாறு வீடு திரும்பி உடல்வாசகத்தில் பறங்கியர் தலைவனுக்கு ஒல்லாந்தருக்கு எதிராகத் துணைபுரிவதாக வாசகம் ஒன்றை எழுதி. அதனை தூதுவன் ஒருவன் பறங்கியர் தலைவனுக்கு எடுத்துச் செல்லும் போது தான் ஐயுற்று பிடித்தாகச் சொல்லி ஒல்லாந்த தேசாதிபதிக்கு கடிதத்தைக் காட்டி முறைப்பாடுசெய்தான். முதலில் தேசாதிபதி அக்கடிதத்தைப் பொய்யெனக் கருதி முறைப்பாட்டினை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். ஆனால் அந்திராசியோ விட்டதாயில்லை. "இக்கடிதத்தில் எழுதியுள்ளதை நீங்கள் நம்பி பூதத்தம்பி மேல் தக்க நடிவடிக்கை எடுக்காவிட்டால்

ஒல்லாந்தர் ஆட்சிக்கு பறங்கியர்களால் தீங்கு ஏற்படின் அதற்கு பொறுப்பு நீங்களே" என தூபமிட்டான் அந்திராசி. அதனைக் கேட்ட தேசாதிபதி பயத்தினால் தக்க விசாரணையின்றி பூதத்தம்பிக்கு மரணதண்டனை விதித்தான்.

ஊர்காவற்துறை கோட்டையைக் கட்டிக்கொண்டிருந்த தேசாதிபதியின் தம்பிக்கு பூதத்தம்பியுடன் நட்புறவு இருப்பதை தெரிந்த அந்திராசி மரணதண்டனை செய்தி அவனுக்கு தெரிந்தால், சிலசமயம் தேசாதிபதியுடன் அவன் பேசி தண்டனையை மாற்றலாம் எனக் கருதி, கால தாமதமின்றி பூதத்தம்பிக்கு மரணதண்டனையை அவசரம் அவசரமாக நிறைவேற்ற வழிவகுத்தான். பூதத்தம்பிக்கு மரணதண்டனை உடனடியாக

நிறைவேற்றப்பட்டது.

கணவன் அநியாயமாய் கொலைசெய்யப்பட்டதை அறிந்த அழகவல்லியும் உடனே உயிர் நீத்தாள். பூதத்தம்பியின் மைத்துனான கைலாய வன்னியன் அதனைக் கேள்விப்பட்டு கொழும்புக்குச் சென்று மகா தேசாதிபதிக்கு நடந்த உண்மையைச்; சொல்லி முறையிட்டான். உடனே யாழ்ப்பாணத்து தேசாதிபதியையும் அந்திராசியையும் பிடித்துவரும்படி மகாதேசாதிபதி சேவகர்களுக்கு கட்டளையிட்டான். அவர்கள் யாழ்பாணத்து தேசாதிபதியைக் கடல் மார்க்கமாகவும. அந்திராசியை தரைமார்க்கமாகவும் கொண்டு சென்றார்கள். கப்பலில் சென்ற தேசாதிபதி தனக்கு கடும் தண்டனை கிடைக்கும் என்ற பயத்தில்

கடலில் குதித்து தன்னுயிரைப் போக்கிக் கொண்டான். அந்திராசி தரை மார்க்கமாக செல்லும் போது பண்டாரத் தோப்பென்ற முசலிக்கு பக்கத்தில் உள்ள காட்டில் யானையடித்து மரணத்தைத் தழுவினான்.

அந்திராசி தமிழனல்ல அவன் ஒரு சிங்களவன் என்பது பல்டேயஸ்பாதிரியார் கருத்து. பூதத்தம்பியின் கதைபற்றி மதசார்பான பல கருத்து வேற்றுமைகள் நிலவியது. சோதிநாதன் என்பவன் பூதத்தம்பியின் ஏகப் புத்திரன். அவனுடைய மகள் பூதனாராய்ச்சி. புதத்தம்பியின் முன்னோரிடம் புவேனக்கபாகுவின் பதக்கம் ஒன்றிருந்தது. அப்பதக்கம் சந்ததி சந்தியாக கையளிக்கப்பட்டு பூதனாராய்ச்சி காலத்தில் நல்லூர் கந்தசுவாமி கோயிலுக்கு கையளிக்கப்பட்டது. அப்பதக்கத்தை இன்றும்

அக்கோயிலில் காணலாம். பூதத்தம்பி இருந்தவிடம் பூதனாராய்ச்சி வளவென நல்லூர் கந்தசாமி கோயிலுக்கு அருகே இருக்கிறது.





## மரபுக் கதை 7

# முன்னேஸ்வரம் பத்திரகாளியம்மன்

சிலாபத்திலிருந்து வடக்கே, குருநாகல் பாதையில், மூன்று மைல் தூரத்தில் அமைந்துள்ளது முன்னேஸ்வரம் சிவன் கோவில். ஐந்து ஈஸ்வரங்களில் இதுவும் ஒன்ற. வரலாறு படைத்த கோயில். இலங்கையில் உள்ள ஐந்து ஈஸ்வரங்களில் முன்னேஸ்வரம் முதல் தோன்றியதால் முன்னேஸ்வரம் என்ற நாமம் பெற்றது என்பது பலர் கருத்து. சிவபக்தனான இராவணன் அதைத் தோற்றுவித்ததாக ஆதாரமற்ற கதைகளுண்டு

கத்தோலிக்கரும் பௌத்தர்களும் பெருபான்மையாக வாழும் சூழ்நிலையில் தொன்மைவாய்ந்த முன்னேஸ்வரத்தில் ஈஸ்வரன் எழுந்தருளியிருப்பது இந்து மதம் ஒருகாலத்தில் அப்பகுதிகளில் செழித்து வளர்ந்ததிற்குச் சான்றாகும். ஆலயத்தைச்

சூழ தென்னந்தோட்டங்களும் நெல்வயல்களுமுண்டு. குளக்கோட்டு மன்னன். பழம் பெருமைகளை இழந்து சிதைந்த நிலையில் இருந்த கோயிலைச் சீர்திருத்த திருப்பணிகளை குறைவறச் செய்து மகாகும்பாபிஷேகம் செய்வித்தான். ஆலயம் தொடர்பான கல்வெட்டுச் சாசனங்கள் இன்றும் காணப்படுகின்றன. ஆலயத்தில் உயரமான பழைய கற்குத்துவிளக்குகள் இன்றும் காணப்படுகின்றன. ஒரு சமயம் விளையாடிக்கொண்டிருந்த ஒரு சிறுமி அதிசயத்தக்தக்கவாறு தங்கவிக்கிரமாக மாறியதாகவும் அந்த விக்கிரகமே இன்றும் உள்ளே வைத்து பூஜை செய்யப்படுவதாகக் மரபு வழி வந்த கதையுண்டு.

ரிஷி முனிவரினால் இக்கோயில் தோற்றுவிக்கப்பட்டதால் முனிஈஸ்வரம் ஸ்ரீ முன்னேஸ்வரம் எனப்பெயர் வந்ததாகக் கதையுண்டு. யுத்தத்தில் இராவணனையும் ஆயிரக்கணக்கான வீரர்களையும் கொன்று இராமன் தன் மனைவி சீதை சகிதம் புஸ்பக விமானத்தில் இந்தியா திரும்பும்போது பிரம்மஹத்தி தோஷம் நீங்க இத்தலத்துக்கு விஜயம் செய்து, சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, பூஜை செய்தார் எனத் தக்ஷண கைலாச மகாத்மீயம் கூறுகிறது. இக்கோயில் விஜயகுமாரனால் புணர்த்தனம் செய்யப்பட்டதாக வரலாறு கூறுகிறது. சோழர்கள் இலங்கையை ஆண்டபோது இக்கோயில் அவர்களால் பரிபாலிக்கப்பட்டது.

வியாசக முனிவரால் கூறப்பட்டக்

கதையின்படி, சில ரிஷிகள் விஷ்ணுவை மோகினி என்ற பெண்வேடம் எடுத்து சிவனை மயக்கும்படி வேண்டினர். சிவன் அதையறிந்து பிட்சாதனன் என்ற வேடவ உருவம் எடுத்து மோகினியுடன் கலந்ததினால் ஐயனார் என்ற ஹரிஹரபுத்திரன் உதயமானார். ஐயனாருக்கு தெதுரு ஓயவுக்கு அருகேயுள்ள சித்தமடுவென்றயிடத்தில் கோயில் உண்டு. இப்போது அக்கோயிலுக்கு வேறுபெயருண்டு. ஈஸ்வரன் கோயிலைச் சுற்றிச்செல்லும் மாயவன் ஆற்றினை இப்போது தெதுரு ஓயாவென அழைப்பர்

1578ம் ஆண்டு போர்த்துக்கேயரின் பொருள் ஆசைக்கு இக்கோயில் பழியானது. கோயிலின் போக்கிஷங்கள் கொள்ளையடிக்கப்பட்டு கோயிலும்

சிதைக்கப்பட்டது. இரு நூறு வருடங்களுக்குபின் ஒரு மீனவரின் வலையில் தேவியின் விக்கிரகம் சிக்கியது. அம்மீனவர் அவ்விக்கிரகத்தை ஒரு பிராமணரிடம் கொடுத்தான். அவரும் இரகசியமாக விக்கிரகத்திற்கு பூஜைசெய்து வந்தார். விக்கிரகம் பிராமணரிடம் இருப்பதை அறிந்து விக்கிரகத்தைக் களவெடுத்ததாக அவர் மேல் வழக்கு தொடரப்பட்டது. நீதிமன்றத்தில் மற்றைய விக்கரகங்களுடன் இருந்த உண்மையான விக்கிரகத்தை அடையாளம் காட்டாவிடில் சிறை செல்ல வேண்டுமேயென பிராமணர் பயந்தார். தன்னை காப்பாற்றும்படி தேவியிடம் வேண்டி வழிபட்டார். ஒரு நாள் இரவு தேவி கனவில் தோன்றி" உன் பக்தியை மெச்சினேன். நீ ஒன்றுக்கும் அஞ்சாதே.  ஒவ்வொரு விக்கிரகத்தையும்

பார்த்தபின் நீ என்னருகே வந்தவுடன் உனக்கு ஒரு சமிக்ஞை காட்டுவேன். அப்போது நீ என்னை அடையாளம் காட்டலாம்." என்றாள். அவ்வாரே நீதிமன்றத்தில் பல ஒரே மாதிரியான விக்கிரகங்களுக்கிடையே உண்மையான விக்கிரகத்தை அடையாளம் காட்டும் தினம் வந்தது. ஒவ்வொரு விக்கிரமாக பார்த்தபடி பிராமணர் பதட்டதுடன் தாண்டிவந்தார். உண்மையான தேவியின் விக்கிரகத்தை அணுகியபோது விக்கிரகத்திலிருந்த மலர் அவர் காலடியில் விழுந்தது. அதுவே தேவி கனவில் சொன்ன சமிக்ஞை எனக் கருதி விக்கிரகத்தை சரியாக அடையாளம் காட்டினார். வழக்கும் அவர் சார்பில் தீர்ந்தது. விக்கிரகத்தை ஊர்வலமாக எடுத்துச் சென்று பிரதிஷ்டைசெய்து வணங்கத் தொடங்கினார்.

ஒரு பூரணைத்தினத்தன்று, ஆலமரத்தடியில் தியானம் செய்து கொண்டிருந்த அகஸ்தியர் முனிவர் முன் அம்மன் காட்சி அளித்து "நீ வேண்டிய வரம் கேள் "என்றாள். அகஸ்தியரோ தனக்கென வரம் கேட்காமல் அங்குள்ள பக்தர்களை ஆசீர்வதிக்கும்படி வேண்டினார் என ஐதீகக் கதையுண்டு. ஆகஸ்ட் மாதத்தில் வரும் பௌர்ணமி தினத்தன்று நடக்கும் திருவிழா. அகத்தியருக்கு அம்மன் காட்சியளித்த ஞாபகர்த்தமாக நடைபெறும். முன்னேஸ்வர ஆலயத்தின் வருடாந்த உற்சவம் 27 நாட்கள் நடைபெறும், இதில் 20 நாட்கள் திருவிழாக்களை பௌத்த சிங்களவர்கள் நடத்தி தமக்கு சைவத்தில் உள்ள நம்பிக்கையையும் மதிப்பையும் வெளிப்படுத்துவார்கள்.

*******

முன்னேஸ்வரம் கோயிலுக்கு இரு காவல் தெய்வங்களுண்டு. வடமேற்கில் ஐயனார் என்ற ஐயப்பன் கோயிலும், வடக்கே பத்திரகாளி அம்மன் கோயிலுமுண்டு. பத்திரகாளி கோயிலில் ஒருகாலத்தில் ஆடு கோழி பலிகொடுக்கப்பட்டது. இப்போது நிறுத்தப்பட்டுள்ளது.

மரச்சோலையின் மத்தியில் அமைந்துள்ள. பத்திரகாளி கோயில் சிங்களவர்களாலும் தமிழர்களாலும் வழிபடும் கோயிலாகும். பத்திரகாளி அம்மனின் சக்தியைப் பற்றி பல கதைகள் உண்டு. குற்றச் செயல்கள் புரிந்து, வழக்குகளை சந்தித்த பலர் காளிக்கு நேர்ந்து உபவாசம் இருந்து பொங்கி பலி கொடுத்துச் சென்று வழக்கில் வெற்றி கண்டனர். இன்னொருவர் தனது எதிரியை

பழி தீர்க்குமுகமாக காளிக்கு நேர்ந்து பொங்கி ஆட்டை பலிகொடுத்தாகவும், உடனே அவரின் எதிரி உயிர் போனதாக கதையுண்டு. முன்னேஸ்வரருக்கு மட்டும் காளி காவல் தெய்வமல்ல, அவள் ஊர்வாசிகளுக்கு கூட காவல் தெய்வமாக அமைந்திருந்தாள். சுற்று புறக் கிராமங்களில் தொற்று நோய்கள் வராமல் தடுக்கவும்; குற்றச் செயல்கள் பரவாமல் இருக்கவும் அவள் தான் காரணம் என்பது ஊர்வாசிகள்; நம்பிக்கை. மூலஸ்தானத்தில் கம்பீரமாக, தீய சக்திகளை வதை செய்யும் கோலத்தில் அவள் காட்சி கொடுத்தது பலருக்கு அவள் மேல் பயம் காரணமாக மரியாதையையும் தோற்றிவிக்க ஏதுவாக இருந்தது. சுற்றுப்புரக் கிராமங்களில் மக்கள் தினமும் அங்கு வந்து அவளைத் தரிசித்து செல்வார்கள்.

கோயிலைப் பராமரித்து, மூன்று நேரமும் பூஜை செய்து வந்த லட்சுமணன் பூசாரியின் குடும்பம் கோயில் அருகே வாழ்ந்து வந்தது. கோயில் வளவு துப்பரவாக இருப்பதற்கு அவரே முழுக்காரணம். பூஜைக்கு பின் சில சமயம் உரு வந்து அவர் சொல்லும் வாக்கு பலித்தாக பலர் பேசிக் கொண்டார்கள். பூசாரிக்கு திருமணமாகி பத்து வருடங்களாகியும் குழந்தைச் செல்வம் கிடைக்கவில்லை. அதனால் மனமுடைந்த அவர் மனைவி சிறிது சிறிதாகக் காளி மேல் நம்பிக்கை இழக்கத் தொடங்கினாள். காளியின் பூஜைக்கு தினமும் அவள் செய்து கொடுத்த நெய்வேத்தியத்தை தயாரித்துக் கொடுப்பதில் பின்வாங்கத் தொடங்கினாள். கணவனுடன் சேர்ந்து கோயில் வளவை கூட்டி தினமும் துப்பரவு செய்யும் பணியும் கொஞ்சம் கொஞ்சமாக குறையத்

தொடங்கியது. பூசாரி மனைவியின் போக்கினைக் கண்டு மனம் வருந்தினார். எவ்வளவோ காளியின் சக்தியைப் பற்றி சொல்லிப் பார்த்தார், அவள் மனம் மாறவில்லை. தினமும் அவர் காளியம்னிடம் மனமுருகி அழுது தனக்கு பிள்ளைப் பாக்கியம் தரும்படியும் மனைவியன் போக்கு மாறும்படியும் வேண்டினார். அவர் வேண்டுகோள் ஓரளவுக்கு பலன் கொடுத்தது. ஆனால் மனைவியின் குணம் மட்டும் மாறவில்லை.

பூசாரி குடும்பத்துக்கு ஒரு அழகிய பெண் குழந்தை பிறந்தது. அவர் மனைவியின் கவனம் முழுவதும் குழந்தையை பராமரிப்பதிலேயே சென்றது. கோயில் பணிகளை முற்றாகப் புறக்கணித்தாள். குழந்தை தவழத் தொடங்கயது. கோயிலுக்கு

வந்து பக்தர்கள் குழந்தையின் அழகைப் பார்த்து வியந்தனர். அதன் முகத்தில் ஒரு வித அருள் இருப்பதைக் கண்டார்கள்.

ஒரு நாள் பூஜாரி பூஜை செய்யப் பிரசாதங்களுடன் புறப்பட்டார். அன்று அவ்வளவுக்கு கோயிலில.
கூட்டமிருக்கவில்லை. வீட்டு வேலை அதிகம் இருந்த காரணத்தால் அவர் மனைவி, குழந்தையைச் சற்று நேரம் கவனித்து கொள்ளும் படி கணவனை வேண்டியபின்னர் கோயிலில் விட்டு விட்டுச் சென்றாள். குழந்தையை அவள் அங்கே விட்டுச் சென்றதை அவர் வேலையில் ஈடுபட்டிருந்ததால் கவனிக்கவில்லை. பூஜை முடிந்து மூலஸ்தான அறைக்கதவை முடிவிட்டு வெளியே வந்தார் பூசாரி. அதே சமயம்

குழந்தையை எடுத்துச்செல்ல அவர் மனைவியும் வந்தாள். குழந்தையைக காணாது பதறிப்போனாள் அவள்.

“எங்கே எங்கள் குழந்தை? உங்களை கவனிக்கச் சொல்லிவிட்டுச் சென்றேனே “என்று கணவனைப் பார்த்து சத்தம் போட்டாள்.

“நீ குழந்தையை கோயிலில் விட்டு சென்றது எனக்குத் தெரியாது. நான் காளி பூசையில் முழுக் கவனம் செலுத்தினபடியால் நீ சொல்லிச் சென்றது எனக்கு கேட்கவில்லை” என்றார் பூசாரி.;

மனைவிக்கு அவர் பதில் கோபத்தைக் கொடுத்தது. ஒரு சமயம் என் அழகிய குழந்தையை உங்களுக்குத் தெரியாமல் யாரோ தூக்கிச் சென்று விட்டார்களோ.

நீங்களும் ஒரு தந்தைய்யா” என்று கோபத்தில் கணவனைத் திட்டினாள். பார்த்துக்கொண்டு நின்றவர்கள் வாயடைத்துப் போனார்கள்.

“கொஞ்சம் பொறு. குழந்தையை நீ இங்கு விட்டிருந்தால் ஒரு வேலை தவழ்ந்து மூலஸ்தானத்துக்குள் போய் இருக்கலாம். நான் கதவை திறந்து உளளே சென்று பார்க்கிறேன் என்று போய் கதவைத் திறந்தார். கதவைத்த திறக்க முடியவில்லை. பதறிப்போய் கதவின் சாவித் துவாரத்தினூடாக உள்ளே பார்த்தார். அவர் கண்ட காட்சியை அவரால் நம்பமுடியவில்லை. அவரின் குழந்தை பத்திரகாளியின் கைகளில் சிரித்து விளையாடிக்கொண்டிருந்தது. அதன் வாயில் இருந்து பால் வடிந்து

கொண்டிருந்தது. எப்படி குழந்தை பத்திரகாளி சிலையின் கைகளுக்கு மாறியது? இது என்ன அதிசயம் என்று நினைத்து மனைவியிடம் "நீ ஒன்றுக்கும் யோசிக்காதே உன்னுடைய குழந்தை பத்திரமாக காளியின் கையில் இருந்து பால் குடிக்கிறாள். நீ வந்து சாவித்தூவாரத்தினாடகப் பார். அப்போது புரியும் உனக்கு" என்றார் பூசாரி.

மனைவி போய் தூவாரத்தினூடகப் பார்த்த போது அவளுக்கு பயமும் கோபமும் வந்தது. "ஏய் காளி என் குழந்தையை ஒன்றும் செய்யாதே. என் குழந்தையை விட்டு விடு" என்று கூக்குரலிட்டாள்.":

பதிலுக்கு உள்ளே இருந்து "உன் குழந்தை என்னோடு விளையாடுகிறாள். அவளை நான் பார்த்து கொள்கிறேன். நாளை வந்து

குழந்தை பெற்றுக் கொள்" என்ற அசரீரி வாக்கொன்று கேட்டது.

பூசாரி மனைவிக்கு அதைக் கேட்டவுடன் மேலும் கோபம் கூடியது. பேசத்தகாத தூஷண வார்த்தைகளால் கணவன் தடுத்தும் கேளாது பத்திரகாளியைத் திட்டத் தொடங்கினாள். அவ்வளவுக்கு குழந்தை மேல் உள்ள பாசம் அவளுக்கு. பல ஊர்வாசிகள் அவள் போட்ட சத்தம் கேட்டு கூடிவிட்டனர். ஆவர்களும் காளியை திட்ட வேண்டாம், குழந்தைக்கு ஒன்றும் நடக்காது என்று சொல்லிப்பார்த்தார்கள். அவள் திட்டுவதை நிறுத்தவில்லை. கதவை திறக்கப் பார்த்தார்கள் முடியவில்லை. உள்ளே பார்த்தார்கள் ஒரே இருட்டாக இருந்தது. பூசாரியின் மனைவி கதறி அழுது களைத்துப் போய் அறைவாசலில்

படுத்துவிட்டாள்.

மறுநாள் காலை அறை கதவு வழியாக இரத்தம் கசிந்திருந்ததை கண்ட பூசாரி பதறி அடித்துக்கொண்டு போய் அறையை திறந்த போது, அறைக்குள் அவர் கண்ட கோரக் காட்சி அவரை திகைக்க வைத்தது. குழந்தைீயின் உடல் கிழிக்கப் பட்டு, நிலத்தில் உயறற்று குழந்தை கிடந்தது. பத்திரகாளியின் கண்கள் கோபத்தால் சிவந்திருந்தது. மனைவியின் நடத்தை அவ்வளவுக்கு பத்திரகாளியின் கோபத்தைத் தூண்டிவிடும் என்ற அவர் நினைத்திருக்கவில்லை. வாசிலில் கிடந்த மனைவியை தட்டி எழுப்பினார்.

“அதோ பார் நீ பேசின கெட்ட வார்த்தைகளால் என்ன நடந்திருக்கிறது என்று. காளியின் உக்கிரகத்தை நீ

அறியவில்லையா. குழந்தை தன்னோடு விளையாடுகிறது, பிறகு திருப்பித் தருகிறேன் என்று சொல்லியும் நீ கெட்டகவில்லையே. இப்போ குழந்தையை பறிகொடுத்து விட்டு நிற்கிறாய்" என்றார் பக்கத்தில் நின்ற காளி பக்தர் ஒருவார். பூசாரியின் மனைவி பேச வாயெடுத்தாள், ஆனால் வார்த்தைகள் வெளியே வரவில்லை. குழந்தையின் உடல் இரண்டாக கிழிபட்டு இரத்த்தில் உறைந்து கிடந்தது அவளுக்கு பேரதிர்ச்சியைக் கொடுத்தது. அவள் ஊமையானாள்.

இச் சம்பவம் வெகு காலத்துக்கு முன் நடந்தாக மரபு வழியாக இக் கதை அப்பகுதிமக்களால் சொல்லப்பட்டு வருகிறது. இது எவ்வளவுக்கு உண்மை என்பதற்கு ஆதாரமில்லை.

# மரபுக் கதை 8 ( தேவதை மர அதிசயம்)



மரபுக் கதை 8

## தேவதை மர அதிசயம்

தற்போது பிறநாட்டவர்களும் வசதி படைத்தவர்களும் வாழும் இடமான கறுவாக் காடு எனப்படும் கொழும்பு மாநகரசபையின் ஏழாம வட்டாரம் ஒரு காலத்தில் கறுவா மரங்கள் நிறைந்த காடாக இருந்தது. பழமை வாய்ந்த பிஷப் கல்லூரி 190 ஆண்டுகளுக்கு முன் ஸ்தாபிக்கப்பட்ட பப்டிஸ்ட் தேவாலயம் போன்ற சரித்திர வரலாறு படைத்த கட்டிடங்களை இப்பகுதி உள்ளடக்கியுள்ளது. நல்ல நிழலைத் தரும்

முதிர்ந்த மரச்சோலைகள் நிறைந்த இப்பகுதியை ஆங்கிலேயர் பெருதும்; விரும்பியபடியால் பல வீடுகள் தோன்றின. சிறிது சிறிதாக கறுவாக் காடுகள் அழிக்கப்பட்டு அதிகாரிகள் தங்க வீடுகளும், காரியாலயங்களும் அமைக்கப்பட்டன. அங்குள்ள காணிகளின் மதிப்பு அதிகரிக்க தொடங்கியது. பல அரச திணைக்களங்கள் உள்ள கொழும்புக் கோட்டைக்கு அங்கிருந்து போக இலகுவாக இருந்தபடியால் அப்பகுதி பிரசித்தம் அடைந்தது. இன்று கொழும்பு மாநகரசபை கட்டிடமும், பிரதான வைத்தியசாலையும் இப்பகுதியில் உண்டு.

கொழும்பு கறுவாக்காட்டு பகுதியில் உள்ள லிப்டன்ஸ வட்டத்தை *(Liptons Circle)* எவரும்; அறிந்ததே. அதனைக் கண்

*ஆஸ்பத்திரி சந்தி (Eye Hospital Junction) என்றும்அழைப்பர். ஆறு வீதிகள் சந்திக்கும் முக்கிய சந்தி அது. அச்சந்திக்கு அருகே கொழும்பு மாநகரசபைக்கு பின் பக்கத்தில் உள்ள "தேவத்தாகக்கா மசூதி" சுமார் 183 ஆண்டுகளுக்கு முன் தோன்றியது. தேவத்தாகக்கா என்பது தேவதை மரம் என்பதை சிங்களத்தில் குறிக்கும். தேவதை இருந்த அந்த மரம் அங்கு இருக்கிறதோ இல்லையோ ஆனால் அவ்விடத்தில் ஒரு அதிசயம் நடந்ததினால் ஒரு மசூதி தோன்ற காரணமாகயிருந்தது என்பது மரபு வழி வந்த கதையாகும். சேக் உஸ்மான சித்தீக்கி பின் அப்துல் ரகுமான் என்ற ஒரு ஞானி சமாதி அடைந்த அவ்விடத்தில் அவர் ஞாபகார்த்தமாக கட்டப்பட்ட மசூதியை அவ்வழியே போகும் ஒரு முஸ்லீமாவது தரிசிக்காமல் செல்வது*

கிடையாது. வெள்ளை சாயம் பூசிய அக்கட்டிடம் எவரது பார்வையில் இருந்தும் தப்பாது. இந்த ஞானி சிவனொலிபாத மலையையும் பலாங்கொடையில் உள்ள பள்ளிவாசல ஒன்றையும் தரிசிப்பதற்காக சௌதி அரேபியாவில் உள்ள அரபாத் என்ற இடத்தில் இருந்து வந்ததாகவும், நாடு திரும்பும் வழியில் கறுவாக்காட்டில் வசித்ததாகவும் பின்னர். ஆங்கேயே சமாதி அடைந்ததாகவும் கதையுண்டு.

1820ஆம் ஆண்டில் பம்பலபிட்டி என்ற வட்டாரத்தில் இருந்து மருதானை என்ற பகுதிக்கு போவதென்றால் அக்காலத்தில் கறுவாக்காட்டு வழியாகதான போக இலகுவாக இருந்தது. எண்ணை வணிகம் செய்யும் ஒருத்தி தனது மருதானையில் வசிக்கும் வாடிக்கை காரர்களுக்கு, மண்

பானைகளில், பம்பலப்பிட்டியில் உள்ள தனது வீட்டில் இருந்து இக் கறுவாக்காடு வழியே தினமும் எண்ணை எடுத்துச் செல்வது வழக்கம். அவளது முழுக்குடும்பமும் அவளது உழைப்பிலேயே தங்கி வாழ்ந்தது. நேர்மையான கடவுள் பக்தி நிறைந்த உழைப்பாளி அவள். ஒரு நாள் தலையில் எண்ணை பானையுடன் போகும் போது கஜு மரத்தின் வேர் ஒன்றில் கால் தடுக்கி விழுந்தால். தலையில் இருந்து எண்ணைப் பானை கீழே விழுந்து உடைந்தது. எண்ணை நிலத்தில் சிதறியது.

“ஐயோ கடவுளே எனக்கு இக்கதியா? என் குடும்பத்துக்கு இன்று உண்பதற்கு உணவில்லாமல் போகப்போகிறதே. நான் விற்பதற்கு கொண்டு வந்த எண்ணை எல்லாம் பானை உடைந்ததால் சிதறி

விட்டதே! நான் இனி என்ன செய்வேன்?" என ஓ வென்று கதறி அழுதாள்.

அச்சமயம் அவளைச் சமாதானப் படுத்த அக்காட்டில் ஒருவரும் இருக்கவில்லை. தன் தலை விதியை நொந்து அழுதபடி அசதியினால் அம்மரத்தடியில் தூங்கிவிட்டாள். தீடிரென ஒரு அசிரீரி கேட்டு அவள் பதைத்து எழுந்தாள்.

"பெண்ணே கவலைப்படாதே. எல்லாம் நல்லபடி நடக்கும்." என்றது அந்தக் குரல். பெண் சுற்றும் முற்றும் பார்த்தாள் குரலுக்கு சொந்தமானவரைக் காணவிலலை. மீண்டும் பயத்தால் அழத்தொடங்கினாள். திரும்பவும் அதே குரல் கேட்டது. அந்த குரல் கேட்ட திசையை நோக்கிய போது பச்சை நிற ஆடை அணிந்த தாடியுடன் ஒரு முதியவரை கண்டாள். அவர் அங்கு தோன்றியது

அவளுக்கு ஆறுலைக் கொடுத்தது. அவள் அருகே வந்து அவர் “நீ ஒன்றுக்கும் பயப்படாதே. கீழே நீ சிந்திய எண்ணை முழுவதையும் உனக்கு திருப்பித் தருகிறேன். அதற்கு ஒரு பானை ஒன்றை கொண்டுவா” என்றார் முதியவர். உடனே அருகாமையில் உள்ள மருதானையில் அவளது வாடிக்கைக்காரர் மம்மா லெப்பை என்பவரின் வீடு தான் அவள் நினைவுக்கு வந்தது. உடனே அவர் வீட்டுக்குச்சென்று அவரின் தாயாரிடம் தனக்கு ஒரு பானை தரும்படி கேட்டாள். எண்ணைக்காரியின் புதுமையான வேண்டுகோள் மம்மா லெப்பையின் தாயுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. “என்ன உனக்கு நடந்தது”? என அவள் கேட்ட போது, “நான் திரும்பி வந்து எனக்கு நடந்த முழுக்கதைய்யும் உங்களுக்குச் சொல்லுகிறேன்” என்று பதில்

சொல்லிவிட்டு பானையுடன் தடுக்கி விழுந்த மரத்தடிக்குப் திரும்பவும் சென்றாள்.

அங்கே அந்த முதியவர் தேவதாமரத்தோடு சாயந்தபடி நினறார். அவளை பானை உடைந்து கிடந்து இடத்தில் கொண்டு வந்த பானையை வைக்கச்சொன்னார். அவளும் அவ்வாரே செய்தாள். உடனே தனது கால் பாதத்தை எண்ணை சிந்திய பகுதியில் அமிழ்தினார். என்ன ஆச்சரியம.; மண்ணுடன் கலந்து போன எண்ணை குபு குபு வென்று பூமியில் இருந்து வெளியேறியது. பெண் ஆச்சரியத்தால் வாயடைத்துப்போனாள். கஜூ மரத்தில் இருந்து சில இலைகளைப் பறித்து அவளிடம் கொடுத்தார் அம் முதியவர். “இலைகளைப் பாவித்து எண்ணையை அள்ளி பானைக்குள் நிறப்பு” என்றார் அவர்.

அவளும் அவர் கட்டளையிட்டபடி செய்தாள். பானையில் எண்ணையை அவள் நிறப்பியதும், “இனி இதைக் கொண்டு போய் வியாபாரம் செய்து பணம் சம்பாதித்து உனது குடும்பத்தின் பசியைத் தீர். நடந்ததை உனது முஸ்லீம் வாடிக்கைகாரர்களுக்கு எடுத்துச்சொல்லி இது நடந்த இடத்தை கொண்டு வந்து அவர்களுக்கு காட்டு என்றார்". எண்ணை விற்கும் பெண்ணும் முதியவருக்கு நன்றி தெரிவத்து வணங்கி அவரது ஆசியைப் பெற்றாள்.

உடனே நடந்ததை மம்மா லெப்பையின் தாயுக்குப் போய் சொன்னாள். அவர்கள் அதை கேட்டபின் மம்மதா லெப்பை, பெரிய பிசசை, மீரா கானி ஆகிய மூவரும் எண்ணைக்காரியுடன் சம்பவம் நடந்த

இடத்திற்கு விரைந்தனர். அங்கு உடைந்த பானை, எண்ணையில் தோய்ந்த மண், கஜூ மரம், அதன் இலைகளைக் கண்டார்கள்; அற்புதத்தை செய்து காட்டிய யார் அந்த ஞானி என அல்லாவிடம் கேட்டு பிரார்த்தித்தனர். மம்தா லெப்பையின் விட்டுக்கு திரும்பவும் சென்ற அவர்களுக்கு லெப்பையின் தாய் எண்ணைக்காரி சொன்ன சம்பவம் உண்மையென உறுதிசெய்தாள். எண்ணைக்காரியிடம் இருந்த மிகுதி எண்ணையையும் வாங்கிக் கொண்டு அவளுக்கு உணவு கொடுத்து வீட்டுக்கு அனுப்பினார் மம்மா லெப்பை.

1847ஆம் ஆண்டு, இவ்வதிசயம் நடந்து 27 வருடங்களுக்கு பின்னர். இறைபக்தி உள்ள சேக் அலி ஜபரூத் மௌளானா என்பவர் அவ்விடத்தில் கட்டப்பட்டிருந்த மசூதிக்கு

வந்தார். அவருக்கு நடந்த அதிசயம் எடுத்துச் சொல்லப்பட்டது. அவர் அந்த ஞானியின் சமாதியை அடையாளம் கண்டு அதன் தனது ஜூப்பா என்ற மத வழிபாட்டு ஆடையுடன் முழங்காளிட்டு வணங்கத் தொடங்கினார். சமாதியில் வணங்கி வெளிவந்த போது அவர் முகத்தில் ஒரு பிரகாசமான ஜோதி தெரிந்தது. அங்கு குழுமி இருந்த முஸ்லீம் பிரமுகர்களை நோக்கி" எல்லாம் வல்ல அல்லா! இது மதிப்புக்குரிய சேக் உஸ்மான சித்தீக்கி பின் அப்துல் ரகுமான் அவர்களின் சமாதி. இவர் இந்நாட்டுக்கு சௌதி அரேபியாவில் இருந்து வந்து சிவனொலிபாதமலையைத் தரிசித்த பின்னர் இவ்விடத்தில் சில காலம் வாழ்ந்து சமாதியானவர். இன்று முஸ்லீம் மாதமான சூல்குவதாவின் நாலாம் நாள். ஒவ்வொரு வருடமும் இம்மாதம் நாலாம் நாளிலிருந்து

*10 நாட்கள் இந்த ஞானி நினைவாக பிரார்த்தனை செய்து நியாத் கொடுப்போமாக" என்றார். அவர் ஒரு தங்கப் பவுன் காசை அந்த மசூதிக்கு பொறுப்பாளரான மம்மா லெப்பையிடம் கையளித்து நெய்சோறு தயாரிக்கும் படி கட்டளையிட்டார். பின்னர் மூங்கில் கொடிக்கம்பத்தில் தனது வெள்ளைத் தலைப்பாகையில் இருந்த துணியின் ஒரு பகுதியை கிழித்து கொடியாக கட்டி, சமாதியின் தலைமாட்டில் கொடிக்கம்பத்தை நட்டு வணங்கினார். இந்த வழக்கம் இன்றும் இம்மசூதியில் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது.*



## மரபுக் கதை 9

## சிகிரியா

சுமார் இருமில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர், எரிமலை வெடித்து. அதன் எரிமலைக் குழம்பு காலப்போக்கில் உறைந்ததினால் தோன்றியவையே சிகிரியாவும், பிதுரங்கல குன்றுகள். சிகிரியா கொழும்பிலிருந்து 165 கிமீ தூரத்திலும், தம்புள்ளவில் இருந்து 15 கிமீ தூரத்தில் அமைந்த கிராமம். வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் இலங்கையில் விரும்பி பார்க்கும் இடங்களில், சிகிரியாவும் ஒன்று. இக குன்றில் இருந்து 1 கி. மீ தூரத்தில்

*பிதுரங்கல குன்று உண்டு. சிகிரியா என்றவுடன் எம் கண்முன் நிற்பது 200 மீட்டர் உயரமுள்ள குன்றும் சிகிரியாச் சித்திரங்களுமே. அச்சித்திரங்கள், இந்தியாவில் உள்ள குப்தா மன்னர் காலத்தில் வரையப்பட்ட. அஜந்தா குகைச் சித்திரங்களப் போன்றவை. கலை ஆர்வம் உள்ள மன்னரால் உருவாக்கப்பட்டவை. இன்றும் பிரசித்தம் பெற்ற சித்திரங்கள். இவை 1500 ஆண்டுகளுக்கு முன்னர் வரையப்பட்டவை.*

*கொழும்பிலிருந்து வடக்கே நான்கு மணித்தியாலப் பயணத்தின் பின்னர் சிகிரியாவைப் போய் அடையலாம். தாதுசேனன் என்ற மன்னன் கி.பி 455 முதல் 473 வரை அனுராதபுரத்திருந்து ஆட்சி செய்தான். தமிழ்நாட்டில் இருந்து வந்த*

மன்னர்களின் ஆக்கிரமிப்பில் இருந்து நாட்டை மீட்டான். அவனுக்கு காசியப்பன், மொகலான என்ற இருமகன்கள் இருந்தனர். காசியப்பன் தாதுசேனனின் மூத்த மகன். அதில் மொகலான என்பவன் பட்டத்துகுரிய அரசிக்கு பிறந்தவன். காசியப்பானின தாய், தாதுசேனனின் வைப்பாட்டியாவாள். அவள் பல்லவ நாட்டைச் சேர்ந்தவள். அதனால் தனக்குப் பின் மொகலான என்ற தன் இரண்டாவது மகனே அரசை ஆட்சி செய்வான் என தாதுசேனன் பிரகனப்படுத்தினான். காசியப்பனுக்கு அப்பிரகடனம் பெரும் ஏமாற்றத்தைக் கொடுத்தது. தன் தந்தை இறந்த பின்னர் மன்னாக வர முடியாது என்ற ஏமாற்றம் அவனுக்கு. தந்தையைக் கொலை செய்து, ஆட்சியை கைப்பற்ற திட்மிட்டான். தாதுசெனனிடம் உன் செல்வத்தை எங்கு

ஒளித்து வைத்திருக்கிறாய் என்று காசியப்பன் தந்தையிடம் கேட்ட போது, “கலாவெல” என்ற பிரமாண்டமான குளத்துக்கு அவனை அழைத்துச் சென்று குளத்தைக் காட்டி. “இது தான் என் சொத்து” என்றானாம் தாதுசேனன். கலாவெல, யோத எல போன்ற 18 குளங்களை விவசாயத்துக்காக தாதுசேனன் கட்டுவித்தான்.

தாதுசேனன். தனது மருமகனும், சகோதரியின் மகனும், பிரதான தளபதியுமான மிகாராவின் வெறுப்புக்கு ஆளானான், காரணம் தாதுசேனனின் அன்புமகளை மனைவி என்று பாராது, மிகாரா சவுக்கால் அடித்துத் துன்புறுத்தியதே. அதற்கு பழி தீர்க்க, மிகராவின் தாயை தாதுசேனன் எரித்துக்

கொன்றான். காசிப்பாவின் தாயின் சகோதரன் மிகாரா. காசியப்பனுக்கு தூதுசேனனின் மேல் உள்ள வெறுப்பைத் தனக்கு சாதகமாக பயன்படுத்த மிகாரா திட்டமிட்டான். காசிப்பன், மிகராவின் உதவியோடு தந்தையைக் கொல செய்தான். தாதுசேனனின் உடலை சிறைச்சாலை சுவருக்குள் வைத்து பூசி மெலுகினான், மிகாரா. இது நடந்தது காசிப்பனின் கட்டளைப்படி. வரலாற்றுச் சான்றுகள் வேறுபட்ட விதமாக தாதுசேனனின் கொலையைச் சித்தரித்துள்ளது. காசிப்பன், மன்னன் என்பதால் அவன் மேல் பழியைச் சுமத்தாமல் மிகராமேல் பழியைச் சுமத்தியது. தாதுசேனனின் உடலை கலாவெவ குளத்தின் அணைக்கட்டில் புதைத்தார்கள் என்றொரு கதையும் உண்டு. எது எப்படி

இருப்பினும் தாதுசேனனின் மரணத்துக்கு காசியப்பனின் பழி தீர்க்கும் நோக்கமே காரணமாயிருந்தது.

புத்த மதத்துக்கு எதிராக காசியப்பன் செயற்பட்டதால், அவனை மக்களும், புத்த பிக்குகளும் வெறுத்தனர். மக்களின் வெறுப்பிலிருந்து தன்னை மீட்க பல நல்ல காரியங்களை காசியப்பன் செய்தான். ஆனால் மக்களும் புத்த பிக்குகளும் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. தனது அமைதியற்ற மனநிலையில் இருந்து தன்னைப் பாதுகாத்துகோள்ள தன் அனுராதபர தலைநகரத்தை விட்டு விலகி, புது தலைநகரமொன்றை அமைக்கத் திட்டமிட்டான். அதனால் சிகிரியா என்ற குன்றில் புது தலை நகரத்தை அமைத்தான். அது தனக்கு மன நிம்மதியை

கொடுக்குமென காசியப்பன் நினைத்தான். ஆனால் தகப்பனைக் கொன்ற பாவம் அவனை விட்டு நீங்கவில்லை.

600 அடிகள் உயரமுள்ள சிகிரியா குன்றம் வனத்தால் சூழப்பட்டது. தனது புது தலைநகரத்துக்கு சிகிரியா உகந்த இடமாக அவன் மனதுக்குப் பட்டது. செல்வத்துக்கு அதிபதியான குபேரன் ஆட்சி செய்த அழகாபுரி நகரத்தைப் போலவே தன் நகரமும் அமையவேண்டும் என்பது அவனது ஆசை.

குன்றத்தின் மேல் அவன், தான் வாழ்வதற்கு கோட்டையை அமைத்தான். அங்கு அழகிய பூந்தோட்டமும், குளிப்பதற்கு நீர் தடாகங்களையும் தோற்றுவித்தான். குன்றத்தின் மேற்கு பக்கத்தில் அழகிய அரை நிர்வாணப் பெண்களின் 500 சித்திரங்களை,

இந்தியாவில் உள்ள அஜந்தா குகைச் சித்திரங்களைப் போன்று, ஓவியக் கலைஞர்களைக் கொண்டு வரைவித்தான். அப்பெண்கள் பற்றிய விளக்கமும், வரைந்த சித்திரக் கலைஞர் யார் போன்ற விளக்கங்களும் இல்லை. காலப்போக்கில் அச்சித்திரங்களில் பல மழை, காற்று காரணங்களாலும், மனிதர்களின் நாச வேலைகளிலாலும் அழிந்து போயின. அச்சித்தரங்களில் சில இன்றும் இலங்கையின் சரித்திர வரலாறு படைத்த ஓவியங்களாக கருதப்படுகிறது.

அவ் ஓவியங்களில் காட்சியளிக்கும் பெண்கள்கள் அபரஸ்கள் எனவும், தாரா என்ற பெண் தெய்வம் எனவும் பல விதமாக கருத்து தெரிவித்தனர் வரலாறு எழுதியவர்கள். சிலர் அவ் இளம்பெண்கள்

காசியப்பனின் அந்தப்புரத்து பெண்கள் என்றும் விளக்கம் கொடுத்துள்ளார்கள். காசியப்பன் வானத்தில் தனது கோட்டை இருப்பதாகக் கனவு கண்டு, குன்றத்தில் மேகங்களை வரைந்தான். அது கவர்ச்சியாக இல்லாத படியால் பார்த்தவர்கள் இரசிக்கக் கூடிய பெண்களின் சித்தரங்களை வரைந்ததாக ஆராய்ச்சியாளர்கள் கருத்து.

புத்த பிக்குகளின் ஆதரவைப் பெறாத காசியப்பன், தன் கோபத்தை அவர்கள் மேல் காட்ட பெண்களை சித்திரமாக வரைந்தான் என்றும் சிலர் கருத்து தெரிவித்தனர். சித்திரத்தில் சில பிழைகள் இருக்கிறது என்பது சிலர் கருத்து. எது எப்படியானாலும் குப்தா சக்கரவர்த்தி காலத்தில் வரையப்பட்ட அஜந்தா குகைச் சித்தரங்களைப் போன்றவை சிகிரியா

சித்திரங்கள். காசியப்பனுக்கு சித்திரக் கலையிலும் கவிதை புனைவதிலும் ஆர்வமுண்டு என்கிறது வரலாறு.

14 வருடங்கள் சிகிரியா கோட்டையில் இருந்து காசியப்பன் ஆட்சி புரிந்தாலும் தன தந்தையைக் கொலசெய்த நினைவினால் பாதிக்கப்பட்டான். அவனது இராணுவ தளபதி மிகாராவுக்கும் அவனுக்கு மிடையேலான உறவில் பாதிப்பு ஏற்பட்டது. மிகாரா பெரிய விழாவொன்றை நடத்த காசிப்பன் அனுமதி வழங்காததே அவர்களுக் கிடையேலான உறவு பாதிப்டைய காரணம் என்கிறது வரலாறு. மிகாரா மறைமுகமாக காசியப்பனின் சகோதரன் மொகலானவுக்கு உதவிசெய்தான். அச்சமையம் மொகலானா, காசிப்பனுக்கு எதிராக போர்புரிய தென்

இந்தியாவில் இருந்துபடி படை ஒன்றை திரட்டிக் கொண்டிருந்தான்.

கி.பி 495 இல் காசிப்பனுக்கும், தென் இந்தியாவில் இருந்து படையோடு திரும்பிய அவன் சகோதரன் மொகலானவுக்கும் இடையே போர் நடந்தது. அந்தப்போரில் காசியப்பனின் இராணுவத் தளபதி மிகாரா மறைமுகமாக மொகலானவுக்கு ஆதரவு வழங்கினான். போரில், காசியப்பன் தனது யானை மேல் ஏறிச்சென்ற போது ஒரு சதுப்பு நிலத்தை எதிர்கொள்ள நேர்ந்து. அதனால் போர் புரிய உகந்த இடமொன்றை காசிப்பன் தேடித் திரும்பியபோது அவனது படைகள் மன்னன் பயத்தால் திரும்புகிறான் என நினைத்து படை சிதறி ஓடியது. இந்த ப்பயன்படுத்தி மொகலான தன் சகோதரன் காசியப்பனைத்

*தாக்கினான். தனது தம்பியிடம் தோழ்வியை ஒப்புக்கொண்டால் தான் கைதாக வேண்டும் என அறிந்ததால், காசியப்பன் கத்தியால் தன் கழுத்தை வெட்டி, தற்கொலை செய்து கொண்டான். போரில் வெற்றி பெற்ற மொகலான கி.பி 495 இல் மன்;னனானான். சிகிரியாவில் இருந்து தனது ஆட்சியை அனுராதபுரத்துக்கு மாற்றினான். விதவையான காசியப்பனின் மனைவியைத் திருமணம் செய்து கொணடான். காசியப்பனின் உடல் சிகிரியாவுக்கு அருகே உள்ள பிதுரங்கல குன்றில் புதைக்கப்பட்டது என்கிறது வரலாறு.*



## மரபுக் கதை 10

## சரதியல்

## (இலங்கையின் ரொபின்ஹூட்)

ஒவ்வொரு ஊரிலும் ஒரு சண்டியன் இருக்கத்தான் செய்வான் அவன் தன் வீரத்தைப் பாவித்து நல்லதும் செய்வான், சிலசமயங்களில் கெட்டதும் செய்வான். ஊர் சனங்கள் அந்தச் சண்டியன் தங்களுக்கு நல்லதைச் செய்தால், போற்றி புகழ்வார்கள். இங்கிலாந்தில் ரொபின் ஹட் *(Robin Hood)* என்பவன் அரசுக்கு எதிராகச் செயற்பட்டு, ஏழை எளியவர்களுக்காக வாழ்ந்தான் என்று பிரபலயமான மரபு வழிக்கதையுண்டு. ரொபின் ஹட் ஒரு வில்வீரன்.

விக்டோரியா மகாராணி காலத்தில் நடந்த கதை சரதியலினுடையது. அப்போது இலங்கையைப் பிரித்தானியர் ஆட்சி புரிந்தனர். இலங்கையில் கேகாலை மாவட்டத்தில் சிங்களவரும், தமிழர்களும் வாழ்ந்தனார். கொழும்பிலிருந்து 40 மைல் தூரத்தில் வடக்கே உள்ள கேகாலை அருகே மாவனல்ல கிராமத்தில், உடவான்குன்றம் என்ற இடத்தில் 1832ஆம் ஆண்டு மார்ச் 25 திகதி பிறந்தான். அப்போது பிரித்தானியர் ஆட்சி நடந்துகொண்டிருந்தது. அவனுடைய தந்தை ஒரு புகையிலை வியாபாரி. சரதியல் அவருக்கு மூத்தமகன். இலுகோடா என்ற இடத்தில் உள்ள பௌத்த கோவிலில் கல்வி பயில அவனைத் தகப்பன் அனுப்பிவைத்தார். தான் ஒரு புத்திசாலி எனச் சரதியல் காட்டி; கொண்டாலும் அவனோடு படித்த மற்றைய சிறுவர்களோடு

சண்டை போட்டபடியே இருந்தான். கிராமத்து விதானையாரின் சொந்தக்கார சிறுவனை அடித்தற்காக அவனை சிறுவயதில் பொலீஸ் கைது செய்தது. சரதியலிடம் அடிவாங்கிய சிறுவன் பணக்கார குடும்பத்தவன்.

சிறுவனாக இருக்கும் போதே சரதியலுக்கு பணக்காரர்கள் மீது வெறுப்பு ஏற்பட்டது. தனக்கென ஒரு குழுவை உருவாக்கினான் சரதியல். அந்தக் குழுவில் சில சிறுவர்களையும் சேர்த்துக்கொண்டான். ஊரில், மீசை வைத்த பாவா என்ற முஸ்லீம் முதலாளி ஒருவர் சாமான்களை உயாந்த விலைக்கு விற்று பணக்காரனார். சரதியலுக்கு அது தெரியவேண்டிவந்தது. அவரைபிடித்து, அவர் மீசையை வெட்டி, அவர் பணத்தையும் கடைப்பொருட்களையும்

களவாடி, ஊரில் உள்ள ஏழை மக்களுக்கு பகிர்ந்து கொடுத்தான் சரதியல்.

விரைவில், கேகாலை பகுதியில் பல திருட்டுகளைப் சரதியல் புரிந்தான். சட்டத்தை தன் கையில் எடுத்துக்கொண்டான். எப்படியும் சட்டத்தின் பிடியில் இருந்து தப்பித்துக் கொண்டான். அவனுக்குப் பிரித்தானியர் ஆட்சி மேல் வெறுப்பு. காலப்போக்கில் தனது கிராமத்தை விட்டுபுறப்பட்டு கொழும்பில் இராணுவ வீரர்களின் குடியிருப்பில் வேலைக்காரப் பையனாக வேலைக்கு அமர்ந்தான். அங்கு இராணுவ வீரர்களின் உதவியோடு துப்பாக்கியையும் மற்றறைய ஆயுதங்களையும் பாவிக்க கற்றுக் கொண்டான். பல நாட்களுக்குப் பின்னர் சில ஆயுதங்களையும் பெறுமதியான

பொருட்களையும் களவாடிக் கொண்டு அவ்விடத்தை விட்டு சரதியல் வெளியேறினான்.

உட்டுவான்கந்த என்று இடத்துக்கு திரும்பிய சரதியல் மோசமான குற்றவாளிகளோடு கூட்டு சேர்ந்தான். கண்டி கொழும்பு பெரும் பாதையில் கொள்ளைகளில் ஈடுபட்டு, ஊரில் கொள்ளைக்காரன் என்று பெயர் வாங்கினான். அவனது பெயர் கேகாலையில் பலருக்கு தெரியவந்தது. நாட்டுக் கோட்டை செட்டியாரை கொள்ளையடித்து கொலை செய்ததற்காக கைது செய்யப்பட்டான். ஆனால் சரதியல் மேல் வழக்கு தொடர போதிய ஆதாரம் இருக்காததால் விடுதலை செய்யப்பட்டான். மொலிகொட வளவைக் கொள்ளையடித்ததால் அவனை கைது

செய்ய பிடியாணை பிறப்பிக்கப்பட்டது.

கைதாவதிலிருந்து தப்புவதற்காக சிலாபத்தில் இருந்த தன் தந்தையிடம் அபயம் தேடிச் சென்றான். சண்டியனான தன் மகனுக்கு அபயம் கொடுக்க தந்தை மறுத்துவிட்டார். வேறு வழியல்லாமல் திரும்பவும் உட்டுவான்கந்த என்ற இடத்துக்கு திரும்பிச்சென்று மேலும் சட்டத்துக்கு எதிராக குற்றங்களைச் செய்யத் தொடங்கினான்.

சரதியல், நீர்கொழும்புக்கு அருகில் உள்ள பிலவத்த என்ற இடத்தில் இருப்பதாக அறிந்து அவனை கைது செய்ய பொலீஸ் முயற்சித்தது. சரதியலுக்கும் பொலீசுக்கும் இடையே நடந்த போராட்டத்தில் பொலீசுக்கு தன்னைக் காட்டிக் கொடுத்தவனைத் தான் கைதாக முன்பு

கத்தியால் சரதியல் குத்தினான். கொலை செய்ய முயற்சித்த குற்றதுக்காக கொழும்பு ஹல்ஸ்டொப் நீதிமன்றத்தில்; விசாரிக்கப்பட்டான். வழக்கு நடக்கவிருக்கும் தினத்துக்கு முன்னரே சரதியல் விளக்க மறியலில் இருந்து தப்பி ஓடிவிட்டான். திரும்பவும் சரதியலை உட்டுவான்கந்தவில் வைத்து பொலீஸ் கைது செய்தது.

கொழும்புக்கு அவனை நீதிமனறத்தில் ஆஜராக்குவதற்குப் போகும் வழியில் ஒரு இரவு மஹர என்றயிடத்தில் அவனோடு பொலீஸ் தங்க நேர்ந்தது. சரதியலைப் பற்றித் தாழ்வாக கருதியபடியால் அவனைப் போதுமான பாதுகாப்புடன் பொலீஸ் வைத்திருக்கவில்லை. அந்தச் சந்தர்ப்பத்தை பாவித்து சரதியல் பொலீசிடம் இருந்து கைவிலங்களோடு திரும்பவும் தப்பி

ஓடினான்.

தப்பியோடிய சரதியல் மீண்டும் உட்டுவான்கந்தவுக்கு திரும்பி, பெரும்பாதையில் கொள்ளையடிப்பவர்களோடு கூட்டமைத்தான். அக்கூட்த்தில் ஹவுதியா, பாவா, சிறிமாலே, கிரிஹெறான்டா, சுவந்தா, மாமலே மரைக்காயர் உள்ளடங்கினர். உட்டுவான்கந்த அவர்கள் இயங்கும் இடமாக இருந்தது. அந்த குன்றை சுற்றி இருந்த அடர்ந்த காடு, அவர்கள் பாதுகாப்பாக இருக்க உதவியாக இருந்தது. அந்தக் கொள்ளைக்கூட்டம் கொழும்பு — கண்டி பெரும்பாதை வழியில் போகும் வாகனங்களையும், பிரயாணிகளையும், அவர்களது உடமைகளையும் கொள்ளையடித்தனர். அக் கொளளைக்

கூட்டத்தின் செயல்கள் சட்டத்துக்குச் சவாலாக இருந்தது.

கண்டிக்குப் பொருட்களை உட்டுவான்கந்த என்ற இடத்தைக் கடந்து எடுத்துச் செல்ல வேண்டியிருந்ததால் கொந்துராத்துகாரர்கள் ஆயுதம் தாங்கிய பொலீசின் பாதுகாப்பை நாடினர். அப்படி பாதுகாப்பு இருந்தும் அவர்கள் சரதியலின் கூட்டதால் கொள்ளையடிக்கப்பட்டனர். சரதியலின் பயங்கரச் செயல்கள் விரைவில் நாடு முழுவதும் தெரியவந்து. கண்டி-கொழுப்புக்கான பாதையில் அடிக்கடி சரதியல் கூட்டத்தின் செயல்களால் போக்குவரத்தில் தடை ஏற்பட்டது.

சரதியல் கூட்டத்தினால் இழைக்கப்பட்ட குற்றங்கள் எல்லைக்கு மீறியதால் கேகாலை, மாவனல்ல, ஹின்குல

ஆகிய இடங்களில உள்ள போலீகாரர்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டது. கேகாலை உதவி அரச அதிபரும், பொலீஸ் சூப்பிரண்டன்டனும் கேகால மாவட்டத்தில் உள்ள கிராம விதானைமார்களுக்கு மக்களை அணுகி சரதியலை கைது செய்ய உதவும் படி கெட்டு சுற்றறிக்கை வெளியிடப்பட்டது. இந்தக் கட்டத்தில் சரதியலின் நடவடிக்கை, ரம்புக்கன, பொலகாகவலை, குருநாகல் ஆகிய இடங்களுக்கும் பரவியது. கலகெதர இடத்தில் இருந்து குதிரை விற்க வந்த அரேபியரைக் கொன்று அவனிடம் இருந்த 500 ரூபாய்களை கொள்ளையடித்தான் சரதியல். இரு வியாபாரிகளை, பொலீசக்குத் தம்மைக் காட்டி கொடுத்தவர்கள் என்பதால் கொலை செய்தான். நாளடைவில் சரதியலின் கதை

மக்களிடையே மரபு வழிக் கதையாயிற்று. அவனைப் பற்றி பேசவே மக்கள் பயந்தனர்.

ஒரு நாள் தாய்வீட்டில் அடைக்கலம் புகுந்த சரதியலை பொலீஸ் சுற்றிவலைத்தது. வீட்டுச் சுவரில் இருந்த துவாரமூடாகச் சுட்டு. இருவர் உயிர்ளைப் பலியெடுத்தான் சரதியல். முற்றுகையின் போது நடந்த குழப்பத்தில். சரதியல். மாத்தளைப் பகுதியில் உள்ள காட்டுப் பகுதிக்குத் தப்பி ஓடினான்.

சரதியலின் கூட்டத்தில் இருந்த சிறிமாலே என்பவன் சரதியலின்; கூட்டத்திலிருந்து விலகிப் போய் சரதியலை பொலீசக்கு காட்டி கொடுக்க தீர்மானித்தான். சரதியலை மாவனல்ல என்ற ஊரில் உள்ள வீடடில் சரதிலை பதுங்கி இருக்கும்படி சிறிமாலே ஆலோசனை சொன்னான் அந்த இரண்டுமாடி வீட்டில் சிறிமாலாவை நம்பி

சரதியலும் மாமலே மரைக்காயரும் தங்கியிருக்கும் போது சிறிமாலே காட்டிக்கொடுத்து, பொலீஸ் வீட்டை முற்றுகையிட்டது. சார்ஜன்ட் அகமத் உடனடியாக சரதியலை நோக்கி சுட்டார். திருப்பித் சுடுவதற்கு முன்பே சரதியல் காயப்பட்டான். மாமலே மரைக்காயர் சுட்டதினால் பொலீஸ்காரர் சாபான அதிலேயே உயிர் நீத்தார்.

திரும்பவும் மரைக்காயர் சுட முன்னரே. மாமலே மரைக்காயரின் துப்பாக்கிச் சூட்டில் இருந்து சார்ஜன்ட் அகமத் சாகாமல் தப்பினார். பொலீஸகாரர் தப்பி ஓடாமல் இருக்க மாமலே மரைக்காய்h வீட்டு வாசலில் ரிவால்வரோடு காவலுக்கு இருந்தான். அந்த சமயம் கேகாலை உதவி அரசாங்க அதிபராக இருந்த சோண்டேர்ஸ்

என்பவர், சிலோன் ரைபில் படையைச் சேர்ந்த சிலரோடு சரதியலும் மாமலே மரைக்காயரும் இருந்த வீட்டுக்கு வந்தார்கள். இனியும் தப்பித்துப் போகமுடியாது என்று கண்ட அவர்கள், வேறு வழியின்றி சரணடைந்தனர். சரதியலும் மாமலே மரைக்காயரும் கண்டியில் உள்ள நீதிமன்றத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அவர்கள் செய்த பெரும் பல குற்றங்களுக்காக, அவர்கள் மேல் வழக்கு தொடரப்பட்டு, தொம்சன் என்ற ஆங்கில நீதிபதி இருவரையும் குற்றவாளிகளாக கண்டு' இருவருக்கும் மரணதண்டனை விதித்தார். ஆங்கிலம் பேசும் ஜூரி முன்னே அவர்களது வழக்கு விசாரிக்கப்பட்டது. சிறைச்சாலையில் சரதியல் இருக்கும் போது தான் செய்த தவறுகளுக்காக மனம்

வருந்தினான்.;

அட்வகேட் ரிச்சாட் மோர்கன் என்ற அட்வகேட், அரச வழக்கறிஞராக அவர்களுக்கு எதிராக ஆஜரானார். கவர்னருக்கு அவர் சமர்பித்த அறிக்கையில் இரு பொலீஸகாரர்களின் வீரத்தனைப் பாராட்டி எழுதினார். பொலீஸ்காரன் சாபான என்பவர் சரதிலைக் கைது செய்ய முயற்சித்து போது சுடுபட்டு 1864ஆம் ஆண்டு. மார்ச் மாதம் 24ஆம் திகதி மரணமடைந்தார் இலங்கையில் தன் கடமையை செய்யும் போது உயிர் இழந்த முதல் பொலீஸ்காரரும் இவரே. அவர் மரணத்தின் பின்னர் ஒவ்வொரு வருடமும் மார்ச் 24ம் திகதி பொலீஸ் இலாக்கா மறைந்த பொலீஸ் வீரர்களின் நினைவு தினமாக அனுசரிக்கிறது. 1864ஆம் ஆண்டு

மே மதம் 7ஆம் திகதி சரதியலும் மாமலே மரைக்காயரும் கண்டி போகம்பர சிறச்சாலையில் தூக்கிலிடப்பட்டனர். ஆயிரக்கணக்காக மக்கள் சரதியலைக் கடைசி முறையாகப் பார்க்க திரண்டிருந்தனர். சரதியலை மூர்க்கமான, துணிவுமிக்க, உடலமைப்பு கொண்ட மனிதனாக எதிர்பார்த்த சனங்களுக்கு சரதியலின் இனிமையான முகமும், மெலிந்த உடலோடு இருந்தது ஆச்சரியத்தைக் கொடுத்தது. தூக்கில் தொங்க முன்னர் எதையும் சொல்வதற்கு மாமலே மரைக்காயருக்கு துணிவு இருக்கவில்லை. தான் வாழக்கையில் வழிகெட்டு வாழந்தது மக்களுக்கு ஒரு படிப்பினையாக இருக்கட்டும் என்று இறக்க முன் சரதியல் வேண்டிக்கொண்டான்.

சரதியல் கேகாலை மாவட்டத்தில் ஒரு பெரும் பயங்கரவாதியாக இருந்தாலும் ஏழைகளிடம் இருந்து அவன் திருடவில்லை. பணக்காரர்களிடம். இருந்த பணத்தை ஏழைக்கு கொடுப்பது தான் ரொபின் ஹூட்டின் கொள்கை போன்றது. சூதாட்டக்கரானான சரதியல் தான் வாங்கிய சீதனத்தொகைய்யின் இருமடங்கையும் அதோடு தனது பரிசாக சில பொருட்களையும் கொடுத்தான். பணக்காரர்களிடம் இருந்து செல்வத்தைப் பறித்து ஏழைமக்களுக்கு அவன் கொடுத்தபடியால் சிறீ லங்காவின் ரொபின் ஹூட் எனப் பெயர் எடுத்தான்.



## *மரபுக் கதை 11*

# *விகாரமகா தேவி*

*களனி கங்கையானது சிவனொலிபாதை மலையில் தோன்றி நுவரெலியா, இரத்தினபுரி, கேகாலை, மாவட்டங்களுக் கூடாக 145 கி.மீ தூரம் ஓடி, கொழும்புக்கருகே, மேற்கு கடலில் சங்கமம் ஆகிறது. களனி நகரம் கொழும்பிலிருந்து மேற்கு கடல் ஓரத்தில் வடக்கே 10 கி.மீ தூரத்தில், உள்ள 2000 வருடங்களுக்கு மேற்பட்ட வரலாறு படைத்த நகரம். இந்நகரம் இராமாயணத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. இராவணின் சகோதரன்*

விபீஷணன் ஆண்ட பகுதி. இராமர் இராவணனை போரில் வென்று ஆயோத்தியா நகர் திரும்பமுன், தன் சகோதரன் லஷ்மணனைக் கொண்டு விபீஷணனை களனியில் இருந்து இலங்கையை ஆட்சி புரியச்செய்தான். களனி கங்கை கடலோடு கலக்கும் இடம் என்றபடியால் நகரத்துக்கு களனி என்ற பெயர் கிடைத்தது. புத்தர் இருதடவை இவ்விடத்துக்கு விஜயம் செய்ததாக மகாவம்சம் கூறுகிறது. முற்காலத்தில் களனி, நகரமாகவும் இராச்சியமாகவும் இருந்தது. சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் களினி பகுதியை சுனாமி தாக்கியதால் தலைகரம் கொழும்புக்கு மாறியது என்கிறார்கள்; வரலாற்றாளர்கள். அக்காலத்தில்; மத்திய கிழக்கு, தென்கிழக்கு நாடுகளில் இருந்து வியாபாரம் நிமித்தம்

வணிகர்கள் வந்து இறங்கிய இடம் களனி.

கி.மு முதலாம் நூற்றாண்டில் களனி இராச்சியத்தை களனிதிஸ்ஸ என்ற மன்னன் ஆட்சிசெய்தான். இவனது மகள் பெயர் தேவி. ஆனால் தற்போதைய ஆராச்சியின் படி சனவாரியாக அவள் பெயர் இருந்திருக்கலாம் என்பது ஒரு சாரர் கருத்து. சனவாரி, மாலைப் பொழுதினைக் குறிக்கும் பெயர்.

களனி திஸ்ஸ மன்னன் ஒரு கோடுங்கோலன். களனி பௌத்த விகாரையில் வயது வந்த பௌத்த துறவியும் அவரோடு 500 இளம் துறவிகளும் வழிபட்டுவந்தனர். அவர்கள் தமது போசனத்துக்காக அரண்மனைக் செல்வது வழக்கம்; வயது வந்த துறவியிடம் மன்னனின் இளைய சகோதரன் உத்தியா

கல்வி பயின்று வந்தான். உத்தியாவுக்கு பட்டத்து இராணி மேல் காதல். தன்மனைவிக்கும் சகோதரனுக்கும் இடையே இருந்த காதல் பற்றி அறிந்த மன்னன் உத்தியா மேல் நடிவடிக்கை எடுக்க முன்னர், உத்தியா தப்பி ஓடி உடுகம்பொல என்ற இடத்தில் மறைந்து வாழ்ந்தான். ஆனால் அவனுக்கும் இராணிக்குமிடையே தொடர்பு இருந்தது. இராணிக்கு ஒரு காதல் கடிதம் ஒன்றை எழுதி, துறைவி வேடம் தரித்த இளைஞன் ஒருவன் மூலம் உத்தியா கொடுத்து அனுப்பினான். அரண்மனைக்குப் போசனம் அருந்த துறவிகள் செல்லும் போது அவர்களோடு சேர்ந்து போய் கடிதத்தை இராணிக்கு கொடுக்கும் படி சொன்னான். போசனம் முடிந்து வயது வந்த துறவியோடு அரண்மனையை விட்டும் வெளியேறும் போது கடிதத்தை ராணிக்கு

கொடுக்கும் சமயத்தில் அக்கடிதம் கீழே விழுந்த. சத்தம் கேட்ட மன்னன் கடிதத்தைக் கண்டான். வயது வந்த துறவிதான் இராணிக்கு கடிதத்தை எழுதியிருக்கிறார் என்று கடிதத்தில் உள்ள கையெழுத்தைக் கொண்டு முடிவு செய்து துறவியை உயிருடன் கொதிக்கும் எண்ணைக்குள் போட்டு கொலை செய்தான் மன்னன். பின்பு கடிதம் கொண்டு சென்றது துறைவி வேடம் போட்ட இளைஞன் என்றறிந்த மன்னர் அவனையும் கொலைசெய்து அவன் உடலை களனி ஆற்றுக்குள் வீசினான். தனது சகோதரனுடன் இராணியின் தொடர்பு இருந்ததால்; அவளையும் கயிற்றால் கட்டி ஆற்றுக்குள் எறிந்து அவளது உயிரையும் பலி கொண்டான். பௌத்த துறவியை கொதி எண்ணைக்குள் மூழ்கடித்து கொன்ற மன்னனின் செயல்

மக்களிடையே கோபத்தைத் தோற்றுவித்தது. அவனுடைய கொடுங்கொல் ஆட்சியைக் கண்டு காவல் தெய்வங்கள் சுனாமியை தோற்றுவித்தது இராட்சியத்தின் பெரும் பகுதியை அழித்தது. சமுத்திரத்தின் கரையோரத்திலிருந்து சுமார் நான்கு மைல் தூர நிலத்தை கடல் விழுங்கியது. கரையோரங்களில் களனி முதறகொண்டு மன்னார் வரை வாழ்ந்த 970 மீனவர் குடும்பங்களும் 470 முத்து குளிப்போர் குடும்பங்களும் பேரலைகளுக்கு பலியானார்கள் என்கிறது "ராஜாவளி" என்ற நூல். இந்த சுனாமியால் நீர்கொழும்பு, மாதம்பை, கற்பிட்டி, மன்னார் போன்ற இலங்கையின் மேற்கு கரையோர ஊர்களும் பாதிப்படைந்தன. புத்தளத்துக்கும் கற்பிட்டிக்கும் இடையே உள்ள பல சிறு

தீவுகள் தோன்ற இந்த சுனாமி காரணமாக இருந்திருக்கலாம். களனிஸ்ஸவும் அவனது பட்டத்து யானையும் ஊரைச் சுற்றிவரும்போது ஒரு படுகுழிக்கள் விழுந்ததாகவும் அவனது உடலையுயம் யானையின் உடலையும் கண்டுடிக்க முடியவில்லை என்கிறது வரலாறு. அவன் இறந்த இடம் வத்தலைக்கு அருகே என்பது பலர் கருத்து.

சமுத்திர தேவியின் சீற்றத்தை எவ்வாறு அடக்க முடியும்; என அரசவையில் உள்ள சாத்திரிமார்களைக் கூட்டி ஆலோசனை கேட்டார் களனிதிஸ்ஸ மன்னர்; மன்னனின் மூத்த மகளும் நாட்டின் இளவரசியான தேவியை கடலுக்கு பழி கொடுத்தால் சீற்றம் அடங்கும் என்றார்கள் அரச சாத்திரிமார். கடலின் சீற்றத்தை நாட்டு

மக்களின் கோபத்தையும், அடக்க மன்னருக்கு வேறு வழி தெரியவில்லை. தன் மகள் தேவியை பகடைக் காயாக்கினான் மன்னன். அவளும் தைரியமாக மன்னனின் திட்டத்துக்கு, களனி இராட்சியத்தின் நலனுக்குகாக தேவி உடன்பட்டாள். அவளுக்கு களனி இராச்சியம் தான் முக்கியம். ஒரு அலங்கரித்த வள்ளத்தில், பல நாட்கள் உயிர் வாழத்தேவையான உணவுவகைகள், தண்ணீh ஆகியவற்றை வைத்து தேவியை நகைகளோடு அலங்கரித்து வள்ளத்தில் சமுத்திரத்தில் விட்டான் மன்னன். விடும் போது அவள் யார் என்ற அறிமுகக் கடிதம் ஒன்றையும் வைத்தான். தந்தையின் செயலை எதிர்த்து வீரப் பெண்ணான தேவியும் மறுப்பு தெறிவிக்கவில்லை. சமுத்திரதேவியின் சீற்றம் மன்னனின் அச்செயலால்

அடங்கியது என்கிறது வரலாறு.

தெற்கே நோக்கித் தேவியைச் சுமந்து கொண்டு சென்ற வள்ளம் இலங்கையின் தென்பகுதியான கிரிந்தவுக்கு அருகே உள்ள டோவர என்று கடவோரத்தைப் போய் சேர்ந்தது. கிரிந்த என்ற இடத்தில் ஒரு குன்றின் மேல் உள்ள ஒரு பௌத்த விகார கவன்திஸ்ஸ மன்னனால் கட்டப்பட்டது. கிரிந்த என்ற இடம் ருகுணுவில் உள்ள கதிர்காமத்துக்கு அருகே உள்ள கடலோரக்கிராமம். தேவியோடு மிதநது வந்த வள்ளத்தைக் கண்ட கடல் பறவைகள் ஆரவாரப்பட்டன. அதைக் கண்ட மீனவர்கள், வள்ளத்தில் ஒரு பெண் இருப்பதைக் கண்டு கரைசேர்த்தார்கள். கவன்திஸ்ஸ என்ற ருகுணு இராட்சியத்தின் மன்னனிடம் போய் செய்தியைச்

சொன்னார்கள். அக்காலத்தில் ருகுண இராட்சியம் செழித்து இருந்த இராட்சியம். அதை ஆண்ட மன்னன் கவனதிஸ்ஸ கோதபாய மன்னனின் மகனாவான். திசமகரகம. ருகுணு இராட்சியத்தின் தலைநகராக இருந்து.

வள்ளத்தில் கரை சேர்ந்த தேவியை ஆரவாரத்தோடு ஊர்வலமாய் மன்னனிடம் அழைத்துச் சென்றனர் மீனவர்கள். தேவியோடு இருந்த கடிதத்தை வாசித்தறிந்த கவன்திஸ்ஸ, வள்ளத்தில் கரை சேர்ந்தவள் களினிதிஸ்ஸ மன்னனின் மகள் என்பதையும் அவள் வள்ளத்தில் வந்த காரணத்தையும் வாசித்தறிந்தான். தேவியின் தியாக உள்ளத்தை நினைத்துப் பெருமைப்பட்டான். கிரிந்த விகாரைக்கு அருகே தேவியின் வள்ளம் கரை

சேர்ந்ததால் இளவரசிக்கு விகாரமகாதேவி எனப் பெயரிட்டான். களினிதிஸ்ஸ மன்னிடம். தேவியை மணக்க அனுமதி கேட்டு தூது அனுப்பினான் கவன்திஸ்ஸ. அக்காலத்தில் அனுராதபுரத்தை ஆண்ட நீதி தவறாத எல்லான் என்ற தமிழ் மன்னனுக்கு களனி இராட்சியமும், ருகுணு இராட்சியமும் கப்பம் கட்டி வந்தன. களனிதிஸ்ஸ மன்னனின் அனுமதி பெற்று, கவன்திஸ்ஸ விகாரமகாதேவியை கவன்திஸ்ஸ, மணந்தான். அவளுக்குப் பிறந்த இரு ஆண்குழந்தைகளில் மூத்தவன் கைமுனு, இளையவன் சதாதிஸ்ஸ. இருவருக்கும் இலங்கையை தென் இந்திய அரசர்களின் ஆக்கிரமிப்பில் இருந்து காப்பாற்றுவதே முக்கிய நோக்கமாக இருந்தது. கைமுனு அனுராதபுரத்தை அப்போது ஆண்ட தமிழ் அரசன் எல்லாலனை போரில் வென்று,

சிங்கள இராச்சியங்களை ஒன்றிணைத்தான். அவன் செயல்களினால் அவனுக்குத் துட்டகைமுனு என்ற பெயர் கிடைத்தது. இவன் ஒரு முருக பக்தன் எனவும் போருக்குப் போக முன் கதிர்காமக் கந்தனை வணங்கிச் சென்றதாக வரலாற்றுக்காரர்கள் கூறுகிறார்க சிலர் கதிர்காமக் கோயிலைக் கட்டியது துட்டகைமுனு என்கிறார்கள். இக்காணத்தால் இன்றும் பௌத்த சிங்களவர்களும், இந்துமத தமிழர்களும் கதிர்காமக் கந்தனை வணங்கி வருகிறார்கள்.

திசமாரகமவில் இருந்து கிழக்கே பதினொரு மைல் தூரத்தில் உள்ள கிராமம் கதிர்காமம். மாணிக்க கங்கை இக்கிராமத்தை தழுவிச் செல்கிறது. முருகன், வேடவப் பெண் வள்ளியை கதிகாமத்தின் சுற்றாடலில் சந்தித்து திருமணம் புரிந்ததாக இதிகாசக்

கதையுண்டு.

கைமுனுவும் அவனது பட்டத்து யானையான "கந்துலுவும்" ஒரே நாளில் பிறந்தவர்கள் என்கிறது வரலாறு. துட்டகைமுனுவின் வீரத்தைப்பற்றி அடிக்கடி பெருமையாகப் பேசி அரசியல் இலாபம் பெற்றார்கள் சிங்கள அரசியல் வாதிகள். கைமுனு துயிலும் போது குரண்டியவாறு படுத்திருப்பதைக் கண்ட தாய் விகாரமகாதேவி "ஏன் மகனே இப்படி கால்களை ஒடுக்கியவாறு படுக்கிறாய்"? என்று கேட்டதுக்கு, "தெற்கிலும், கிழக்கிலும் மேற்கிலும் கடல். வடக்கில் தமிழ் அரசனின் ஆட்சி. நான் எப்படி சுதந்திரமாக கால்களை நீட்டித் துயில முடியும்" என்றானாம் கைமுனு. அவன் விகாரமகாதேவியின் பெயரில் கொழும்பில் பெரிய

பூங்காவொன்றுண்டு. கிரிந்தவில், விகாரமகாதேவிக்கு சிலை வைத்துள்ளார்கள்.





## மரபுக் கதை 12

# வற்றாப்பளை அம்மன் அற்புதம்

கண்ணகி அம்மன் வழிபாடு கி.பி 171 முதல் கி.பி 193வரை அனுராதபுரத்தில் இருந்து ஆட்சி புரிந்த கஜபாகு என்ற அரசனால் இலங்கைக்கு கொண்டுவரப்பட்டதென இராஜவாளி என்ற சிங்கள நூல் கூறுகிறது. கஜபாகு ஆட்சி காலத்தில் சேரமன்னன் செங்குட்டுவன் தனது தலைநகராகிய வஞ்சியில், இமயமலையில் இருந்து கொண்டுவந்த கல்லில் கண்ணகிக்கு சிலை செய்து கோயில் அமைத்து பெருவிழா எடுத்தான் கி.பி 178ல் நடந்த அவ்விழாவிற்கு செங்குட்டுவனின் அழைப்பையேற்று அவன் நண்பணாகிய கஜபாகு விழாவில் கலந்து கொண்டான். இவ்விழாவில் பாண்டிய மன்னன் வெற்றிவேற் செழியனும், சோழ அரசன் பெருநற்கிள்ளியும், கொங்குதெச அரசன் இளங்கோ அடிகளும், மகததேச மன்னரும்

கலந்துகொண்டாதாக துரைஜெயநாதன் “ஆதிதிராவிடரும் அழிந்துபோன சங்கங்களும் “என்ற கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். விழாவில் கலந்த கஜபாகு கண்ணகியின் அற்பதங்களைக் கண்டு வியந்தான். கஜபாகு, கண்ணகியை செங்குட்டுவனைப்போல் நித்தியபூசை செய்து வலம் வந்து தன் நாட்டிலும் எழுந்தருளி அருள்புரிய வேண்டும் என்று அவன் கேட்டு பிரார்த்தித்தான். அவன் விரும்பியபடி எல்லாம் நடக்குமென அசிரீரி கேட்டு கஜபாகு உள்ளம் நெகிழ்ந்து கண்ணகிமேல் கூடிய நம்பிக்கை கொண்டான். இலங்கையில் கண்ணகி வழிபாட்டினை பரப்பப் தன் விருப்பததை செங்குட்டுவனிடம் கஜபாகு தெரிவித்தான்.

செங்குட்டுவன், சந்தன மரத்தால் செய்த

கண்ணகி சிலையையும் ஒரு காற்சிலம்பையும் சந்தனமரப்பேழையில் வைத்து கஜபாகுவிடம் கையளித்தான். கஜபாகு கண்ணகி விக்கிரகத்துடன் இலங்கைக்குத் திரும்பும்போது தன்னுடன் பன்னிரண்டாயிரத்துக்கு மேற்பட்ட பல்குடிமக்களையும் அழைத்துச்சென்றான். அவன் வந்திறங்கிய சிலையுடன் வந்திறங்கியது மாதகலுக்கருகேயுள்ள சம்புகோளை துறைமுகம். யானை மேல் சிலையைவைத்து பல யானைகள் பின்னே வர ஊர்வலமாய் பூனகரி ஊடாக தெற்கு இலங்கைக்கு எடுத்துச்சென்றான். ஊர்வலம் நின்றயிடமெல்லாம் கண்ணகி வழிபாடு தோன்றிற்று.

இம்மன்னனால் யாழ்ப்பாணத்தில் முதலாவது கண்ணகி கோயில் ஸ்தாபிக்கப்பட்ட இடம்

அங்கனாக்கடவை எனப்படும் இடம். அங்கனா என்பது அம்மனைக் குறிக்கும். சிங்களநாட்டில் பத்தினி தெய்யோ என கண்ணகி அம்மனை அழைக்க ஆரம்பித்தனர்.

நந்திக்கடல் வற்றாப்பளை அம்மன் கோவிலுக்கு அருகேயுள்ளது. முல்லைத்தீவில் உள்ள வற்றாப்பளை கண்ணகி அம்மன் கோயில் நந்திக்கடல் அருகே இருந்து வருகிறது. கஜபாகு அரசனால் இலங்கையில் ஸ்தாபிக்கப்பட்ட பழமைவாய்ந்த பத்தாவது கண்ணகியம்மாள் கோயில் எனக்கருதப்படுகிறது. பளையென்பது தங்குமிடத்தைக் குறிக்கும். கண்ணகியம்மாள் வந்தமர்ந்த பத்தாவது இடமாகிய பத்தாம்பளை. என்பது மருவி வற்றாப்பளையாயிற்று என்பது வரலாறு.

முல்லைத்தீவு என்ற ஊர் வன்னி

மாவட்டத்தின் தலைநகராகும். கண்டி யாழ்ப்பாண A9 பிரதான வீதியில் உள்ள மாங்குளத்தில் இருந்து, கிழக்கே முல்லைத்தீவுக்கு முப்பது மைல் தூரம A34 என்ற பாதை ஒட்டுசுட்டான், முள்ளியவலை, தண்ணியூற்று ஆகிய கிராமங்களுடாக முல்லைத்தீவுக்கு செல்கிறது. முல்லைத்தீவீல், பிரதான வீதியான A34 யில் இருந்து மூன்று மைல் தூரத்தில் நந்திக் கடல் என்ற வாவியுண்டு. இவ்வாவியின் நீளம் 8.7 மைல்களும் அகலம் 3.1 மைல்களுமாகும். இந்த வாவிக் கரையில தமிழ் ஈழத்தின் இறுதிப் போர் நடந்தது. தனி ஈழத்துக்காக போராடிய தலைவர் துப்பாக்கிச் சூட்டினால் நந்திக் கடலோரத்தில் மரணம் அடைந்தார்.

முன்பு ஒரு காலத்தில், நந்திக் கடலோரத்தில்,

ஆட்டிடையர் குலச் சிறுவர்கள் ஒரு முதுமை வாய்ந்த அம்மையார் ஒருத்தி மரத்தின் கீழ இருப்பதைக் கண்டார்கள். தனக்குத் தங்குவதற்கு இடமில்லை என அவவம்மையார் சிறுவர்களிடம் முறையிட்ட போது அவர்கள் மரத்திற்கு அருகே ஒரு குடிசை அமைத்து கொடுத்தது மட்டுமன்றி அம்மையாருக்கு உண்பதற்கு பொங்கலும் செய்து கொடுத்தார்கள். மாலைப் பொழுதானதும் குடிசைக்குள் விளக்கு ஏரிவதற்கு எண்ணெய் இல்லையே என்று மனம் வருந்தினர். அவர்கள் கவலைப் படுவதைக்கண்ட அம்மூதாட்டியர் “பிள்ளைகளே கடல் நீரை எடுத்து எண்ணையாகப பாவித்து, திரிவைத்து விளக்கேற்றுங்கள் என்றார். இன்றும் கடல் நீரில் அம்மனுக்கு விளக்கு எரிப்பது வழக்கமாய் இருந்து வருகிறது

தனக்கு குடிசை அமைத்து விளக்கேற்றி கொடுத்த சிறுவர்களைப் பார்த்து தனது தலை கடிக்கிறது பேன் பார்த்து விடும்படி கேட்டார். மூதாட்டியாரின் தலை முடியை வகுத்த சிறுவர்கள், தலையெல்லாம் கணகளாயிருப்பதைக் கண்டு பயந்து அலர, "நான் ஒரு வைகாசித் திங்களன்று திரும்பவும் வருவேன்" எனக் கூறி மறைந்தார். சிறுவர்கள் நடந்ததை ஊர் சனங்களுக்கு எடுத்துச்சொன்னபோது அந்த அதிசயம் நடந்த குடிசையிருந்த இடத்தைச் சிறுவர்கள் அவர்களுக்கு காட்டினார்கள். அந்த குடில் இருநத இடத்தில் ஏதோ அதிசயம் இருப்பதாகக் கருதி அவ்விடத்தில் கண்ணகி அம்மனுக்கு கோவில் கட்டி, வைகாசி பௌர்ணமி தினத்தன்று பொங்கல் பொங்கி கடல் நீரில் விளக்கேற்றி வழிபடத் தொடங்கினர். ஆதிகாலத்தில் அம்மன் காட்சி

கொடுத்த ஆடு மேய்க்கும் பரம்பரையை சேர்ந்தவர்களே கோவில் பூசை வழிபாட்டில் பிரதான பங்கு வகிக்கிறார்கள்.

வைகாசிப் பொங்கலுக்கு ஒரு கிழமைக்கு முன்பே, கொயில் பூசாரி, பக்தர்கள், கோயில் நிர்வாகிகள், ஒரு பித்தளைக் குடத்தை மேளதாளத்தோடு சிலாவத்தை என்ற கட்றகரைக்கு எடுத்துச் சென்று, கடல் நீரை குடத்தில் நிறப்புவார்கள். கடல் அலை பொங்கி வரும் போது குடத்தை சரித்து, கடல் நீரை ஒரே தடவையில் மொண்டி அள்ளுவது வழமையாக இருந்து வருகிறது. குடத்தை நீரோடு முள்ளியவளையில உள்ள காத்த விநாயகர் ஆலயத்தில் வைப்பார்கள். வைகாசி பொங்கல் தினத்தன்று விநாயகர் கோவிலில் இருந்து கண்ணகி அம்மன்

கோவிலுக்கு தண்ணீர்க் குடத்தை எடுத்துச் சென்று, மூலஸ்தானத்தில் வீற்றிருக்கும் அம்மனுக்கு குடத்தில் உள்ள கடல் நீரில் விளக்கேற்றி வழிபடுவர்hகள். பொங்கி, நடுச்சாமம், பிராமணர்கள் மந்திரம் ஓத, கட்டாடி உடையார் என வழங்கப்படும் ஒருவர் பொங்கல் பானையை மடியில் வைத்து, அதைச் சுற்றி மாவிலை கட்டி அடுப்பில் வைப்பார். உடையாருக்கு உருவந்து, அடியார்களுக்கு கொடுக்கும் அரிசியை ஒவ்வொரு திசையிலும் வானத்தை நோக்கி உயர வீசுவார். அவர் வீசும் அரிசி அம்மனின் தோழிகளைப் போயடையும் என்பது நம்பிக்கை. மேலே எறிந்த அரிசி, மண்ணிலோ அல்லது பக்தர்கள் தலையிலோ விழுவதில்லை. இதுவும் அம்மனின் அற்புதங்களில் ஒன்றாக கருதப்படுகிறது.

திருக்குறளில் அனிச்ச மலர் மென்மையான மலராக குறிப்பிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு தலத்துக்கும் தல விருட்சம் என்று ஒன்றுண்டு. வற்றாப்பளை அம்மனின் மூலஸ்தானத்துக்கருகே அனிச்ச மரம் ஒன்றுண்டு. இந்த மரத்துக்கு ஒரு வரலாறு உண்டு. போர்த்துக்கேயர் தம்மதத்தைத் தவிர வேறு மதங்களை மதிக்காதவர்கள். பல இந்துக் கோவில்களையும், புத்த விகாராக்களையும் இடித்துத் தள்ளியவர்கள் என்கிறது வரலாறு. போர்த்துக்கேயர் இலங்கையை ஆண்டபோது முல்லைத்தீவுப் பகுதியும் அவர்களது ஆட்சிக்கு கீழ் இருந்தது. ஒரு போர்த்துக்கேய அதிகாரி ஒவ்வொரு முறையும் கோவிலை குதிரையில் தாண்டிச் செல்லும் போது, அம்மனை பரிகாசம் செய்வாராம். ஒரு நாள் கண்ணகி அம்மன்

கோவில அருகே வந்த போது “எங்கே உங்கள் கடவுள் அதிசயங்கள் செய்வதாக கேள்விப்பட்டேன். அது உண்மையானால் எங்கே இப்போது செய்து காட்டட்டும் “என்றார் அனிச்ச மரத்தின் கீழ், குதிரையில் அம்ர்ந்தபடியே அம்மனை அகங்காரத்தோடு தூற்றியவாறு. உடனே தீடிரென அனிச்ச மரம் குளுங்கத் தொடங்கியது. காற்று பயங்கரமாக வீசத்தொடங்கியது. மரத்தில் இருந்த அனிச்சம் காய்கள், அம்மனைப் பரிகாசம் செய்த அதிகாரி மேல்விழுந்தன. அனிச்சம் காய்களின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்க முடியாது அதிகாரி காயமடைந்து குதிரையிலிருந்து, மூர்ச்சித்து கீழே விழுந்தான். அவன் அகங்காரம் அடங்கியது. அதன் பின் இன்றுவரை அந்த அனிச்ச மரம் பூப்பதும், காய்ப்பதும் இல்லை. அதுவும் அம்மனின் அதிசயங்களில் ஒன்று.

பத்தினித் தெய்வமான கண்ணகி அம்மனின் காற்சிலம்புக்கு சின்னம்மை, பெரியம்மை, சின்னமுத்து, கூவக்கட்டு, குக்கல் போன்ற நோய்களைக் குணப்படுத்தும் அதிசயமான சக்தி உண்டு என்பது மக்களின் பொதுவான நம்பிக்கையாகும்.



# மரபுக் கதை 13 ( தலவில்லு தேவாலயம்)



## மரபுக் கதை 13

# தலவில்லு தேவாலயம்

இலங்கையில் கொழும்பில் இருந்து வடக்கே போகும் வழியில் புத்தளம் நகரை அடையமுன், பாலாவி என்ற இடத்தில் இருந்து கற்பிட்டி என்ற ஊரைச் நோக்கிச் செல்கிறது. இந்த பாதை கற்பிட்டி குடாநாட்டில் அமைந்துள்ளது. பாலாவியில் இருந்து கற்பிட்டிக்கு 25 கி.மீ தூரம். கற்பிட்டியை அடைய முன், பாலக்குடா என்ற ஊரில் இருந்து ஒரு பாதை இந்து சமுத்திரத்தின் கரையை நோக்கிச் சென்று தலவில்லு என்ற கரையோரக் கிராமத்தை

அடைகிறது. பாலக்குடாவில் இருந்து 6 கிமீ தூரத்தில் தலைவில்லு செயின்ட் ஆன்ஸ், தேவாலயம் அமைந்துள்ளது. செயினட் ஆன், யேசுநாதரின் தாயார் மேரியின் அன்னை. திருமணமாகத பெண்கள், மரப்பெட்டிகள் செய்யும் தொழிலாளிகள், குதிரையில் பயணம் செய்வோர், பிரசவ வேதனையால் தவிக்கும் பெண்கள் ஆகியோருக்குக் காவல் தெய்வமாகும். ஒரு காலத்தில் தேவாலயத்தைச் சுற்றி ஒரே மணல் திடல். சில பனைமரங்களை அங்கு காணலாம். ஆனால் இப்போது தேவாலயத்தைச் சுற்றி பல வீடுகள் தோன்றிவிட்டன. தலைவில்லுவைச் சுற்றியுள்ள கிராமங்கள் எல்லாம் தமிழ் பெயர்களைக் கொண்டவை. கரையோரமாகத் தெற்கு நோக்கிப் போனால் “உடப்பு” என்ற தமிழர்

பெரும்பான்மையாக வாழும் ஊரை அடையலாம். வில்லு என்றால் குளத்தைக் குறிககும். வில்லு என்று முடிவடையும் பல ஊர்ப்பெயர்களுண்டு. தலவில்லு என்ற பெயரும் அதுபோன்று மருவியபெயராகும்.

செயின்ட் ஆனின் தேவாலயம் தோன்றுவதற்கு இரு மரபு வழிக்கதைகள் உண்டு. கி.பி பதினோரராம் நூற்றாண்டில் போர்த்துக்கேயர், கண்டி இராச்சிய்தைத் தவிர மற்றைய மாகாணங்களை ஆட்சி புரிந்த காலம். ஒரு ஏழை போர்த்துக்கேயன் மன்னாரில் இருநது மேற்கு கரையோரமாக கொழும்புக்கு தொழில் தேடிப் போகும் வழியில், களைப்பால் ஒரு பெரிய மரத்தின் நிழலின் கீழ் தூங்கிவிட்டான். இந்த மரம் அப்போது இருந்தது தற்போது தேவாலயம் இருக்கும் இடத்தில். அவன் தூஙகும் போது

கனவில். மெழுகுவர்த்திகள் இரு பக்கங்களிலும் எரிந்தவண்ணம் காடசி தரும் ஒரு சிலையைக் கண்டான். தூக்கத்தை விட்டு எழும்பிய போது நிஜமாகவே கனவில் கண்ட சிலை மரத்தின் கீழ் இருப்பதைக் கண்டான் அந்த வழிப்போக்கன். அச்சிலை செயின்ட் ஆனினது என்பதை உணர்ந்தான். கனவில் தனக்கு மரத்தடியில் தேவாலயம் ஒன்றறை அமைக்கும் படி செயினட் ஆன் வழிப்போக்கனிடம் வேண்டினாள். செயின்ட் ஆன் கேட்டுக்கொண்டபடி தான் தூங்கிய மரத்தடியில் ஒரு சிறு கோவிலை அமைத்தான். தற்போது தேவாலயத்தில் தரிசனத்துக்கு வைக்கப்பட்டிருக்கும் செயின்ட் ஆனின் சிலையானது போர்த்துகேய வழிப்போக்கன் கனவில் கண்ட சிலையைப் போன்றது.

செயின்ட் ஆன் தேவாலயத்தைப் பற்றி இன்னொரு மரபு வழி வந்த கதையும்உண்டு. அக்காலத்தில் கிராமங்களில் வாழ்பவர்கள் காட்டுப் பொருட்களான தேன், மெழுகு, யானைத் தந்தம், மான்தோல், கருங்காலி மரம் ஆகியவற்றை தலவில்லு வழியே கப்பலில் போகும் வணிகர்களுக்கு விற்று பணம் சம்பாதித்தனர். அவ்வாறு பொருட்களை விற்க போகும் நேரம் ஒரு சமயம் வணிகக் கப்பல் ஒன்று சிதைந்த நிலையில் கடலோரமாக இருப்பதைக் கண்டார்கள். கப்பலில் இருந்து தம்மை உயிரோடு பாதுகாத்தது செயின்ட் ஆன் என்ற தெய்வமெனக் கருதினார்கள். கடலோரத்தில் உள்ள ஒரு ஆலமரத்தின் பொந்தில் செயினட் ஆன் தெய்வத்தின் சிலையை வைத்து வணங்கி நன்றி தெரிவித்தார்கள். அவ்விடத்தை விட்டுப்

போகமுன், கப்பலின் கப்டன் தாங்கள் போகும் வியாபாராம் நல்லாய் நடந்தால் திரும்பிவந்து சிலைவைத்த ஆலமரத்தடியில் செயினட் ஆனுக்கு தேவாலயம் கட்டி, அந்தச் சிலையை வைத்து வணங்குவதாகச் சபதம் எடுத்துப் போனான். சிதைந்த கப்பலை அப்படியே விட்டு விட்டு அவர்கள் வியாபாரம் செய்யும் காலி நகரை நோக்கித் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். தலவில்லுவுக்கு அருகே உள்ள கட்டைக்காடு கிராமத்தில் வாழும் மீனவர்கள்தங்கள் பொருட்களை வழமைபோல் கப்பலில் போகும் வணிகர்களுக்கு விற்கபோகும் போது சிதைந்த கப்பல் கரைதட்டி நிற்பதைக் கண்டார்கள். கப்பலைச் சிதைந்தநிலையில் கண்ட அவர்கள் அவ்விடத்துக்கு "கப்பலடி"

என்றுபெயரிட்டனர். அப்பெயர் இன்றும் நிலவி வருகிறது. அம்மீனவர்கள் ஆலமரத்தடியில் தெய்வத்தின் சிலை இருப்பதைக் கண்டு வணங்கத் தொடங்கினர். கேட்டதைக் கொடுக்கும் தெயவம் என்ற நம்பிக்கையோடு ஊர் மக்கள் வழிபடச் செய்தார்கள். இந்த சமயம் காலிக்குச் சென்ற வணிகனின் வியாபாரம் நன்றாக வளர்ச்சி அடைந்து அவனுக்குப் பெரும்; செல்வம் கிடைத்தது. தனது வாக்கு படி சிலை வைத்து சென்ற ஆலமரத்தடிக்கு திரும்பிப்போய்> சிலைக்கு தேவாலயம் ஒன்றினை அமைத்தான். வருடா வருடம் தேவாலயத்துக்குப் புனித யாத்திரையை அவ்வணிகன் மேற்கொண்டான். ஆலமரத்தடிக்கருகே நல்ல தண்ணீர்க் குளம் இருந்தது. தேவாலயத்துக்கு வரும் பக்தர்களின தாகம் தீர்க்க அக்குளத்தின் நீர்

*பாவிக்பட்டது. நளடைவில் அவ்ρடத்தில் "புனித கிணறு" என்ற பெயரோடு கிணறு ஒன்று தோன்றியது.*

*1943ஆம் ஆண்டளவில், சிலைக்கு தேவாலயம் அமைத்து வழிபட்ட காலத்திலிருந்து, நூறு வருடங்களுக்குப் பின் சிதைந்த கப்பலின் மேலோட்டைக் கண்ட ஊர் மக்கள் கொவிலில் கப்பலின் மேலோட்; டை தேவாலயத்தை உருவாக்கிய வணிகர் நினைவாக வைத்தனர். 1837 இல் தேவாலயத்தைப் புதிப்பிக்க அத்திவாரமிடப்பட்டு 1843ஆம் ஆண்டில் தேவாலயத்தின் கட்டிடத்தைக் கட்டி முடித்தார்கள். செயினட் ஆன் தேவாலயத்தின் மகிமையறிந்து வெகு தூரத்தில் வசித்த கத்தோலிகர்கள்> சிரமம் பாராது தேவாலயத்துக்கு யாத்திரை போய்*

வந்தனர். அக்காலத்தில சிலாபத்தில் இருந்து தெவாலயத்துக்கு மாட்டு வண்டிலில் போய் சேர குறைந்தது மூன்று நாட்கள் எடுத்தன. இப்போது சிலபாத்தில் இருந்து காரில் இரண்டு மணித்தியாலப் பயணம். வன்னியில் உள்ள கன்னி மேரியின் மடு தேவாலயத்தைப் போல் தலவில்லு செயினட் ஆன் தேவாலயமும் இலங்கை வாழ் கத்ததேலிக்கர்களிடையே பிரசித்தம் பெற்ற தேவலாயமாகும்.






# *மரபுக் கதை 14*

## அசோக்கமாலா

உலகில், நாட்டுக்கு நாடு பிரபல்யமான காதல் கதைகள் பல உண்டு. இக்கதைகளில் குறிபாகச் சொல்லப் போனால், அம்பிகாபதி அமராவதி, ரோமியோ ஜூலியட், லைலா மஜ்ஜூனு ஆகிய காதல் கதைகளைக் குறிப்பிடலாம். இந்த காதலை எதிர்க்க காதலன், காதலி குடும்பங்களுக்கிடையே உள்ள குடும்பப் பகமை, சாதி வேற்றுமை, பணக்காரன் ஏழை என்ற வித்தியாசம் காரணமாக இருந்து வந்திருக்கிறது.

இலங்கையில் நடந்த காதல் கதைகளில், சரித்திர வரலாறு படைத்த கதை “சாலியா — அசோக்கமாலா” காதல் கதை. அக்கதை

மக்களின் கவனத்தை ஈர்த்ததுக்கு முக்கிய காரணம், சாலியா சிங்களவர்கள் பெருமையாக பேசும் இலங்கை முழுவதையும் கிமு 161 –137 காலத்தில் ஆண்ட துட்டகைமுனு மன்னனின் மகன் ஆவான். அதோடு பட்டத்துக்கு இளவரசன். அசோக்கமாலா கீழ்சாதியான சண்டாளக் குலத்தைச் சேர்நதவள், ஆனால் அழகி. சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சிங்கள இனத்திடையே சாதிவேற்றுமை இருந்து வந்ததுக்கு இக்கதை ஒரு ஆதாரம். அனுராதபுரத்தில் இக்காதலர்களை கல்லில் சிலை வடிவில் அமைத்து, அனுராதபுரத்தில் உள்ள “இசுருமுனிய” விகாரவுக்கு போக முன், வாசலில் “இசுருமுனிய காதலர்கள்” என்ற பெயரில் செதுக்கி வைத்திருக்கிறார்கள். சிங்களவர்கள் போற்றும் “மகாவம்சம்” என்ற

இலங்கையின் வரலாற்று நூலில் இக்காதல் கதை விபரமாக எழுதப்பட்டுள்ளது

ஒருநாள், இளவரசன் சாலியா, அசோக மரக்காட்டில் உலாவும் போது ஒரு இனிமையான பெண்குரலில் பாட்டோன்றைக் கேட்டான். அந்தக் குரலால் கவரப்பட்ட சலியா, குரல் கேட்ட திசை நோக்கிச் சென்று பாடிய இனிமையான குரல் எவருடையது என்று தேடும் போது, ஒரு அழகிய பெண்ணொருத்தி பாடியபடி, அசோக மலர்களை ஆய்வதைக்கண்டான். அப்பெண்ணின் பூர்வீகமறியாது அவள் மேல் கண்டதும் காதல் கொண்டான். அந்தப் பெண் அசோகமாலா தான் சண்டாளச் சாதியைச் சேர்ந்வள் எனத் தன்னை அறிமுகப்படுத்தியும் அசோகமாலா மேல்

சாலியாவுக்கு ஏற்பட்ட காதலை மாற்றமுடியவில்லை. முற்பிறவியில் சாலியாவும் அசோகமாலாவும் கணவன் மனைவியாக இருந்தவர்கள். அந்தத் தொடர்பே, அவர்களுக்கிடையே காதல் உருவாகக் காரணம் என்கிறது வரலாறு. அசோகமாலா என்ற பெயர் அசோகமலரைக் குறிக்கும்.

பல நல்ல காரியங்களைச் செய்த சாலியா மீது, தந்தை துட்டகைமுனுவும் சாலியாவின் பாட்டியார் விகாரமகாதேவியும் அன்பைப் பொழிந்தனர். சண்டாலச் சாதியைச் செர்ந்த பெண் ஒருத்தியை காதலித்து திருமணம் செய்தால் கைமுனுவுக்குப் பின் மன்னனாக முடியாது என்று சாலியா அறிந்திருந்தும்; அசோக்கமாலாவை மறக்க அவனால் முடியவில்லை. சாலியா- அசோக்கமாலா

காதல், மன்னனின் எதிப்பையும் மீறி, திருமணத்தில் போய் முடிந்தது. அதையறிந்த கைமுனு மன்னன் கோபமுற்று மகனை அரண்மனையைவிட்டு துறத்திவிட்டான். சாலியா- அசோக்கமாலா தம்பதிகள் அரண்மனை வாழ்வில் இருந்து விலகி வாழ்க்கை நடத்தினார்கள்

ஒரு நாள் மூலிகைளால் தன் கைப்பட தாயரிக்கப்பட்ட "ரத்தம்பால" என்ற சுவையான உணவை கைமுனு மன்னனுக்கு அசோகமாலா அனுப்பினாள். ஊணவை அருந்திய மன்னனுக்கு உணுவு வெகுவாக பிடித்துக்கொண்டது. "யார் இந்த உணவைத் தயாரித்தது"? என்று மன்னன் கேட்டபோது, வேறு ஒருவரும் இல்லை மன்னா, உங்கள் மருமகள் அசோக்கமாலாதான் தயாரித்தது என்றனர் உணவை மன்னனுக்

கொடுத்தவர்கள். ஒரு கீழ் சாதிப்பெண் தாயாரித்த உணவையா நான் உண்டேன் எனக் கோபமுற்று "ரத்தம்பால" என்ற அசோகமாலா அனுப்பிய உணவைத் மன்னன் தூக்கி எறிந்தான். உணவு சுவர்களில் தெறித்து சிதறியது.

இந்தச் சம்பவம் நடந்து சில நாட்களில் கைமுனு மன்னன் காலில் பொக்களம் ஒன்று ஏற்பட்டு புண்ணாக்கியது. அதைக் குணமாற்ற அரண்மனை வைத்தியர்கள் எவ்வளவோ முயற்சித்தும் முடியவில்லை. புண் பெரிதாகிக் கொண்டே வந்தது. அதைக் குணப்படுத்த ரத்தம்பால மூலிகை என்பது அவசியம் என்றனர் வைத்தியர்கள். அதை எங்கு தேடியும் கிடைக்கவில்லை. ஒரு அரண்மனை சமையல்காரனுக்கு, மன்னன் அசோகமாலா அனுபிய ரத்தம்பால

உணவை சுவரில் வீசி எறிந்தது நினைவுக்கு வந்தது. உடனே அன் சொல்லி சுவிரில் காயந்திருந்த ரத்தம்பாலவை சுரண்டி எடுத்து வரும்படி வைத்தியர்கள் காவலாளிகளுக்கு கட்டளையிட்டனர். அவர்கள் சுவரில் காயந்து போன ரத்தம்பால என்ற உணவைச் சுரண்டி எடுத்து வந்து வைத்தியர்களிடம் கொடுத்தார்கள். இதைபாவித்து மருந்து தாயரித்து மன்னனின் கால் புண்ணுக்கு வைத்தியம் செய்து வெகு விரைவில் குணப்படுத்தினர். எங்கிருந்து தன் கால் புண் சுகமாவதற்கு வேண்டிய ரத்தம்பால மூலிகை கிடத்தது என்று வேலைக்கார்களிடம் கைமுனு மன்னன் வினாவிய போது, அவர்கள் பயத்தொடு, நடந்த முழுவிபரத்தையும் சொன்னார்கள். கதையைக் கேள்விபட்ட துட்டகைமுனு மன்னன் தான் செய்த

தவறை உணர்ந்தான். அசோகமாலா மேல் அனுதாபப்பட்டான்.; மகன்; சாலியாவையும் மருமகள் அசோகமாலாவையும் மன்னித்து, அரண்மனைக்கு வரவழைத்தான். மருமகளினது அழகையும், அறிவையும் கண்டு மன்னன் பெருமைப்பட்டான். சாலியா-அசோக்கமாலா தம்பதிகளுக்கு முறைப்படி ஆடம்பாரமாக திருமணம் செயது வைத்தான் கைமுனு மன்னன். தமபதிகள் அரண்மனையில் வாழத் தொடங்கினார்கள். ஆனால் சாலியா, தாழந்த பெண்ணைத் திருமணம் செய்த காரணத்தால் மன்னனாக முடியவில்லை. கைமுனுவின் மரணத்துக்குப் பின் அவன் சகோதரன் சாததிஸ்ஸவே மன்னன் ஆனான். இது போன்று இங்கிலாந்து மன்னாயிருந்த எட்டாம் எட்வேர்ட் மன்னன் காதலுக்காக

முடிதுறந்த கதையுண்டு.



# மரபுக் கதை 15 (கண்ணுசாமி கண்டி மன்னனான கதை)

---



## மரபுக் கதை 15

# கண்ணுசாமி கண்டி மன்னனான கதை

நாயக்கர் பரம்பரையில் கடைசியாக கண்டி இராச்சியத்தை ஆண்ட மன்னன் ஸ்ரீ விக்கிரம இராஜசிங்கன். இம்மன்னன் பிறப்பால் தமிழன், இந்து, ஆனால் சந்தாப்பமும் சூழ்நிலையும் அவனைப் பௌத்த சிங்களவர்கள் பெரும்பான்மையாக வாழும் இராச்சியத்துக்கு மன்னனாக்கியது. கண்ணசாமி என்பது இம்மன்னனின் உண்மைப் பெயர். 18 வயதில் ஹங்குரங்கெட்ட என்ற கண்டி இராச்சியத்தின் ஒரு பகுதியின்

*திறைச்சேரிக்கு அதிகாரியாக இருந்தவன். பிள்ளைகள் இல்லாத இராஜாதி இராஜசிங்கா 1798ஆம் ஆண்டு ஜூலை 16ம் திகதி இறந்தவுடன் பிரதம அதிகாரியாக இருந்த பிலிமத்தலாவ ஏற்கனவே போட்டிருந்த திட்டம் அமுலுக்கு வரத்தொடங்கியது. இவ்வதிகாரியின் முழு நோக்கமும் மன்னன் இறந்தவுடன் தானே மன்னனாவதாகும். ஆனால் பிரபுகளுக்கிடையே போட்டியும் போறாமையும் நிலவியபடியால் அவன் நினைத்த மாதிரி மன்னனாக முடியவில்லை. தனக்கு வேண்டியது தன் இஷ்டத்துக்கு ஆட்டிவைக்கக் கூடிய ஒரு மன்னன். அதன் பின்னர் சிறிது சிறிதாக அதிகாரங்களைக் கைக்குள் கொண்டு வந்து அரியாசனத்தைக் கைப்பற்றுவதே அவன் நோக்கம். இதற்கு அவனுக்கு இலக்காக கிடைத்தது*

கண்ணுசாமி.

இராஜாதி இராஜசிங்கனுக்கு நான்கு இராணிமார்கள். அதில் இரு சோடிகள்; சகோதரிகள். முதலாம் சோடிக்கு முத்துசாமி, புத்தசாமி, கண்ணசாமி, சின்னசாமி, அப்புசாமி, அய்யாசாமி, இரங்கசாமி என்று ஏழு சகோதரர்கள். இரண்டாவது சோடிக்கு கந்தசாமி என்ற பெயருடன் ஒரு சகோதரன் இருந்தான். பிள்ளைகள் இல்லாத மன்னன் இறந்தவுடன் நாயக்கர் வம்சத்தின் வழக்கப்படி இவர்களில் ஒருவர் மன்னனாகும் வாய்ப்பு இருந்தது. ஆனால் தனது மரணத்துக்கு முன்னர் மன்னன், முத்துசாமியை தனக்குப் பின் தற்காலிக மன்னராக. இராணிமார் தங்களது சகோதரங்களின் மகன்மார் ஒருவரை அரியாசனத்துக்கு தேர்ந்தெடுக்கும் வரை

நியமித்தான். ஆனால் மகா அதிகாரியான பிலிமத்தலாவ முத்துசாமியை தற்காலிகமாக பதவி ஏற்க விடவில்லை. இவ்வதிகாரியின் திட்டத்தின் படி கண்ணசாமியை அரியாசனத்துக்கு நியமித்து படிப்படியாக தான் பதிவியை கைப்பற்றுவதே.

இராமேஸ்வரத்தின் பிரதம குருக்களான வெங்கட பெருமாளின் மனைவி பெயர் சுப்பம்மா. அவர்களுக்கு பிறந்தவனே கண்ணசாமி. அவன் ரூபத்தில் வறுமையால் வாடிய அவர்களுக்கு நல்வாழ்வுகிட்டியது. இராஜாதி இராஜசிங்காவி இரண்டாவது இராணியான உபேந்திரம்மாவின் சகோதரியே சுப்பம்மா.

கண்ணசாமிக்கு ஐந்துவயதாக இருக்கும் போது தந்தை வெங்கட பெருமாள் சிவபதம் அடைந்தார். அவரின் மரணத்துக்குப் பின்னர்

சுப்பாம்மாவும் மகன் கண்ணசாமியும் அவனது சகோதரன் கொண்டசாமியும் உபேந்திரம்மாவின் உதவிநாடி கண்டிக்கு புலம்பெயர்ந்தனர். கண்டிக்கு புலம் பெயரும் போது கண்ணசாமிக்கு வயது எட்டு. இன்னும் சில வருடங்களில் தான் கண்டி இராச்சியத்துக்கு மன்னனாவேன் என கனவிலும் அவன் நினைத்து பார்த்திருக்கவில்லை.

கண்ணசாமி மன்னான கதை

1790ம் ஆண்டு இராஜாதி இராஜசிங்கனால் மகா அதிகாரியாக பதவி உயர்வு பெற்ற பிலிம்மத்தலாவ நாயக்கர் வம்சத்தை மனதுக்குள் முற்றாக வெறுத்தவன். கண்டி இராச்சியத்தை தொடர்ந்து நாயக்கர் வம்சம் ஆட்சி செய்யக் கூடாதென திட்டம் வகுத்தான். பல பிரபுக்கள் அவனோடு

கூட்டு சேர்ந்தனர். தனது அதிகாரத்தைப் பாவித்து வேண்டியளவுக்குச் செல்வம் சேர்த்தான். பிலிமத்தலாவைமேல் பொறாமை கொண்ட சில பிரபுக்கள் நாயக்கர்களுக்கு ஆதரவு நல்கினர். கரையோரப் பகுதியில் ஏற்பட்ட கலவரங்களை தனக்கு சாதகமாக பாவித்து 1798ஆம் ஆண்டு இராஜாதி இராஜ சிங்காவை பதவியில் இருந்து இறக்கினான் பிலிமத்தலாவ. மன்னன் உயிரோடு இருக்கும் வரை தனது சதித் திட்டத்தை செயல்படுத்துவது கடினம் என்பது அதிகாரிக்கு தெரியும். அரசசபையில் மன்னன் இல்லாததினால் குழப்பங்கள் உருவாகத் தொடங்கியது. விரைவில் தனக்கு ஏற்றவாறு செயல்படக்கூடிய ஒரு நாயக்கர் வம்சத்தைச் சேர்ந்த ஒருவரை மன்னராக்கி பினனர் அவரை தொலைத்துக்

கட்டிவிட்டு தான் அரசு ஏறுவது எனத் தீர்மானித்தான். இதற்கு தேர்நதெடுக்கப்பட்டவன் சுப்பம்மாவின மகன் கண்ணசாமி என்ற இளவரசன். அதிர்ஷ்டம் அவன் பக்கம் இருந்தது. இதை செயல்படுத்த சங்கைக்குரிய மொராதோட்ட இராஜகுரு ஸ்ரீ தம்மாகந்த மகா நாயக்க தேரோவை சந்தித்து தன் திட்டத்தை விளக்கினான் பிலிமத்தலாவை.

“மன்னனின் உயிர் இன்றோ நாளையோ என்ற நிலையில் இருக்கிறது. சில நாட்கள் மட்டுமே அவர் வாழ்வார் என்பது என் கருத்து. அவரின் இடத்திற்கு யாரை நியமிக்க யோசித்திருக்கிறீர்” எனறு பிலிமத்தலாவையை தேரோ கேட்டார்.

“என்னிடம் அதற்கு ஒரு நல்ல திட்டம் இருக்கிறது தேரோ. மன்னனின் இடத்திற்கு

எமது சொல் கேட்டு ஆட்சி புரியும் ஒருவனை தேர்ந்தெடுத்துள்ளேன். பெயரளவில் அவன் மன்னன். ஆனால் அதிகாரங்கள் எம் கையில்” என்றான் பிலிமத்தலாவை.

“நல்லது. நீர் நினைத்தபடி தேர்ந்தெடுத்தவருக்கு படிப்பறிவு இல்லாவிட்டால் சில சமயம் எமக்கு எதிராக சில காலத்தில் செயல்படலாம். எதுற்கும் சிந்தித்து அவரை நியமனம் செய்யும்” என்றார் தேரோ

“அதற்கும் ஒரு வழியுண்டு. அவர் எமக்கு எதிராக மாறினால் நாம் பிரித்தானியரின் உதவி பெற்று அவரை பதவியில் இருந்து இறக்கலாம்.”

“நீர் சொல்வது ஒல்லாந்தர் காலத்தில்

பொருத்தமானதாக இருக்கலாம். ஆனால் பிரித்தானியர்கள் சூழ்ச்சிக்காரர்கள். கடைசியில் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றித் தம் கையுக்குள் கொண்டு வந்து விடுவார்கள். கவனம். யானைப் பாகன் யானையை சரியாகக் கவனிக்காவிடில் அது மற்றவர்களின் உயிருக்கும் ஆபத்தை விளைவிக்கும். அதோடு அதன் உயிருக்கும் ஆபத்து ஏற்படலாம். மற்றவர்களோடு கலந்தாலோசித்து எமது புத்தமதத்தையும், நாட்டையும், உமது அதிகாரங்களையும் காக்க கூடியவரான ஒருவரை தேர்ந்தெடும்." என்றார் தேரோ.

## முத்துசாமியின் கதை

பட்டத்துக்கு தகுதியுள்ளவனான முத்துசாமிக்கு அரியாசனம் கிடைக்காது செய்தவன் பிலிமத்தலாவை. முத்துசாமி

எப்படியும் கண்ணசாமிக்கு எதிராக யுத்தம் செய்து கண்டி இராச்சியத்தை கைப்பற்றலாம் எனக் கருதி அவனைக் கொலை செய்ய பிலிமத்தலாவை திட்டம்போட்டான் இதையறிந்த முத்தசாமி பிரித்தானிய தேசாதிபதி நோர்த்திடம் போய் முறையிட்டான். அவர் முத்துசாமிக்கு அபயம் கொடுத்து சிறுதொகை பணமும் கொடுத்து ஒரு மெய்காப்பாளனுடன் யாழ்ப்பாணத்தில் போய் சிறிது காலம் வாழும்படி அனுப்பிவைத்தான். அவன் வசித்த வீடு யாழ்ப்பாணம் கோட்டைக்குள் இருந்த இராஜமாளிகையாகும். ஒரு நாள் முத்துசாமி விஸ்வநாத சாத்திரியாரை அழைத்து தனக்குரித்தான பட்டம் கிடைக்குமா என்று கேட்ட போது அதற்கு சாஸ்திரியார், “பட்டம் கிடைக்கும். அதுவும் சமீபத்தில் கிடைக்கும். பட்டத்துக்கு முன்னும் பின்னரும்

அரிபகை என்றார். அதைக் கேட்ட முத்துசாமி தான் அரசனாவேன் என்ற மகிழ்ச்சியில் சாஸ்திரியாருக்கு இராஜஜோதிடர் என்ற பட்டம் வழங்கி வேண்டியளவு பணமும் கொடுத்து அனுப்பினான். முன்னும் பின்னும் அரிபகை என்பது, முன்னர் பாம்பு பகையும், பின்னர் தலை அரியும் பகை என்பது அர்த்தமாகும். சாத்திரியார் சொல்லி சில தினங்களில் நாகம் முத்துசாமியைத் தீண்டிற்று. விஷக்கடி வைத்தியர் இருபாலை செட்டியாரின் உதவியை நாடினர். அவரே அவனது விஷத்தை தீர்த்து வைத்தார். அதன் பின்னர் ஆங்கிலேயர் 1808ம் ஆண்டு முத்துசாமியை கண்டிக்கு அழைத்துச் சென்று சம்பிரதாயத்துடன் முடி சூட்டனர். அவனோடு உடன்படிக்கையும் செய்துகொண்டனர். அதன்பின்னர்

பிலிமத்தலாவையினதும், கண்ணசாமியினது, வஞ்சக வலையில் விழுந்த நோர்த் தேசாதிபதி முத்துசாமியுடன் செய்து உடன்படிக்கையை இரத்துசெய்து, அவனை இராசபதவியில் இருந்து நீக்கி, கண்ணசாமியை பிலிமத்தலாவையின் உதவியுடன் அரசானாக்கினான். ஆனால் பிலிமத்தலாவையின் திட்டத்தால் விக்கிரமராஜசிங்கன் என்ற கண்ணசாமி, முத்துசாமியைச் சிரச்சேதம் செய்தான்.

## விக்கிரம இராஜ சிங்கன் ஆட்சி

கண்ணசாமிக்கு நாத தேவாலயத்தில் சில கலவரங்களுக்கிடையே முடி சூட்டப்பட்டது. பத்து வருடங்களுக்கு பிரச்சனைகள் இன்றி ஸ்ரீ விக்கிரம இராஜ சிங்கன் என்ற பெயரில் ஆட்சிபுரிந்தான். இளைஞனான அவனுக்கு கேளிக்கைகளிலும்

சுகபோகத்திலும் நாட்டமிருந்தது. மதுவுக்கும் சிறிது சிறிதாக அடிமையானான். இக்காலக்கட்டதில் திங்கொல்வெலயாய என்ற வயல வெளியை வெட்டி, தற்போதைய கண்டி நகரத்தை ஏற்படுத்தி கண்டி ஏரியையும் உருவாக்கினான். இந்த வயல் பகுதி ஒரு காலத்தில் நாத தேவாலயத்திற்கு தேவையான நெல்லை உற்பத்தி செய்து கொடுத்தது. இதே ஏரியில் தான் தனக்கு எதிராக சதிசெய்த ஏகலப்பொல குமாரகாமி என்ற தேசத் துரோகியை மூழ்கடித்து மன்னன் கொன்றான். தான் மக்களுக்கு தரிசனம் கொடுப்பதற்கு பட்டிருப்புவ என்ற எட்டு சுவர்களையுடைய கட்டுமானம் ஒன்றினை தற்போது உள்ள தலதா மாளிகையில் கட்டினான். இக்கட்டிடத்தை இன்றும் தலதா மாளிகாவில் காணலாம்.

இதன் கட்டிடக் கலைஞர் இந்தியாவைச் சேர்ந்த தேவேந்திர மூலாச்சாரி.

காலப்போக்கில் இறந்த மன்னருக்கு நடந்ததையும் தன்னை சூழ்ந்துள்ள சதிகாரர்களையும் பற்றி மன்னன் சிந்திக்கத் தொடங்கினான். தனக்கு எந்த நேரத்திலும் ஆபத்து ஏற்படலாம் என அவன் மனம் சொல்லிற்று. தன் இராச்சியத்தை எந்த நேரமும் துரோகிகளை கைவசம் போட்டு கைப்பற்ற பிரித்தானியர் காத்திருக்கின்றனர் என்பதையும் அவன் உணர்ந்தான். பிலிமத்தலாவை எதிர்பார்த்தது போல் கண்மூடித்தனமாக முடிவுகள் எடுப்பவனாக மன்னன் இருக்கவில்லை. அவனது போக்கில் மாற்றம் ஏற்பட்டது. அதிகாரத்தை தன் கைக்குள் கொண்டுவந்து கொடுங்கோல் ஆட்சிபுரியத் தொடங்கினான். தன்

அதிகாரிகளிடையே பிரபல்யமானவனாக திகழாவிடிலும் குடிமக்களின் ஆதரவு அவனுக்கு இருந்தது. சாதாரண குடிமக்களின் உரிமைகளுக்காக போராடியதால் பிரபுக்களின் எதிர்ப்பை சம்பாத்தித்துக் கொண்டான். குடிமக்களுக்கு நீதி கிடைக்க வழிசெய்தான். இவனது போக்கினால் பல எதிரிகள் பிரபுகளுக்கிடையே தோன்றினார்கள். பிரித்தானியர்களுக்கு அந்த சூழ்நிலை கண்டியைக் கைப்பற்ற சாதகமாக அமைந்தது.

## கண்டி படையெடுப்பு

1803ம் ஆண்டு ஜனவரி 31ம் திகதி பிரித்தானிய ஜெனரல் மெக்டொவல் என்பவர் கண்டியைக் கைப்பற்ற எடுத்த முயற்சி, உள்நாட்டவர்களின் கடும்

எதிர்ப்பால் தோழ்வியில் முடிந்தது. 1815ம் ஆண்டு கண்டி அரசன் சீத்தாவக்கைப் பகுதியில் இருந்த பிரித்தானியப் படை மேல் தாக்குதலை நடத்தினான். இதுவே பிரித்தானியர் கண்டி இராச்சியத்தின் இரண்டாம் முறையும் படை எடுக்க வேண்டிய நிர்பந்தத்தை ஏற்படுத்தியது. 1814ம் ஆண்டில் கண்டி மன்னன், எகலப்பொல அதிகாகாரியை சப்பிரகமுவ பகுதிக்கு அனுப்பி நிலமையை அறிந்து ஆவன செய்யும்படி சொன்னான். அப்பகுதிக்கு எகலப்பொலவே திசாவை என்ற அதிகாரியாக இருந்தான். அவ்வதிகாரியின் ஆட்சியைப்பற்றி புகார்கள் மன்னன் காதுகளுக்கு எட்டியது. அவ்வதிகாரி பிரித்தானியர்களுடன் சேர்ந்து தனது ஆட்சிக்கு எதிராக சதிதிட்டம் தீட்டுவதாக மன்னன் அறிந்தான். உடனே

எகலப்பொலவை கண்டிக்கு வரும்படி கட்டளையிட்டான். மன்னனின் கோபத்தை அறிந்த எகலப்பொல போகவில்லை. தன்னுயிருக்கு ஆபத்து ஏற்படும் என்பதை அறிந்தே அவன் போகவில்லை. அவனது இடத்திற்கு மொலகொடவை மன்னன் நியமித்து புரட்சியை அடக்கினான். எகலப்பொல தப்பி ஓடி பிரித்தானியரிடம் அடைக்கலம் புகுந்தான். அவனை ஒன்றும் செய்யமுடியாத ஆத்திரத்தில் அவனது மனைவி, பிள்ளைகளையும் இனத்தவர்களையும் படுகொலை செய்து பழிவாங்கினான். இந்தப் படுகொலை மக்களுக்கு பயத்தையும் அதிர்ச்சியையும் கொடுத்தது. இதோடு மட்டும் நிறுத்தாமல் 1808ம் ஆண்டு எட்டு கோரலக்களில் ஏற்பட்ட புரட்சிகளை விசாரணை செய்ய ஆரம்பித்தான். மன்னனுக்கு பல

பிரச்சனைகள் தோன்றத் தொடங்கியது. பிரபுக்களுக்கு அவனது போக்கு பிடிக்கவில்லை. தமது உயிருக்கும் எந்த நேரமும் ஆபத்து ஏற்படலாம் என்ற பயம் அவர்களை பீடித்துக்கொண்டது. மூன்று கோரல்லாக்கள் என்ற பகுதிகளில் பத்து பிரித்தானிய வணிகர்கள் களவாடப்பட்டு உளவாளிகள் என குற்றம் சாட்டி அடித்து துன்புருத்தப்பட்டனர். ஏழு வணிகர்கள் மரணத்தைத் தழுவினர். இந்த சம்பவமே 1815ம் ஆண்டு பிரித்தானியர் கண்டி மேல் படையெடுப்பு நடத்த முக்கிய காரணமாக இருந்தது. கொழும்பு, காலி, திருகோணமலை, நீர்கொழும்பு, மட்டக்களப்பு பகுதிகளில் இருந்து படைகள் கண்டியை நோக்கி முன்னேறின. பிரித்தானியரின் படையெடுப்புக்கு எகலப்பொல துணைபோனார். நாயக்கர்

மன்னனுக்கு எதிராக கண்டி இராச்சியத்தின் பிரபுக்களினதும், மக்களினதும் எதிர்ப்பு பிரித்தானியருக்கு சாதகமாக அமைந்தது. மொலகொடை தனது பகுதியில் பிரித்தானியருக்கு எதிராக எதிர்த்து நின்று போரிட்டாலும் அவர்களுடைய எதிர்ப்பை சமாளிக்க அவரால் முடியவில்லை.

1815ம் ஆண்டு பெப்ரவரி மாதம் 18ம் திகதி ஸ்ரீ விக்கிரமராஜசிங்கன் பிரித்தானியரால் சிறை பிடிக்கப்பட்டான். கொழும்பில் இருந்த தேசாதிபதி பிறவுன்ரிக் என்பவருக்கு மன்னன கைதான செய்தி எட்டியபோது அவர் துயரத்தில் கண்ணீர்விட்டதாக சரித்திர எழுத்தாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். காரணம் 2357 வருடங்களாக இருந்து வந்த இலங்கைத் தீவின் சுதந்திரம் முற்றாகப் பறிபோனதேயாம்.

## இராணி ரங்கம்மாள்.

நாயக்கர் வம்சத்தை சேர்ந்த மன்னனின் பட்டத்தரசி ரங்கம்மாள் அழகானவள். நாயக்கர் வம்சத்திலிருந்து வந்து கண்டியை ஆண்ட மன்னர்கள் புத்திசாலிகள். நாட்டோடு ஒத்துப்போவதற்காக சிங்கள மொழியைக் கற்று பௌத்தர்களானார்கள். இராஜாதி இராஜசிங்கன் சிங்களத்தில் நூல்கள் எழுதியதாகவும் வரலாறு சொல்கிறது. கண்டி இராச்சியம் பிரித்தானியர் கைகளில் விழுந்தவுடன் தெல்தெனியாவுக்கு அருகேயுள்ள நான்கு பக்கமும் மலைகளால் சூழ்ந்த பகுதியான மத்திய மகா நுவர என்ற பகுதியில் போமுறே உடப்பிட்டிய ஆராச்சிக்கே என்பவர் வீட்டில் மன்னரும் குடும்பமும் பதுங்கிக்கொண்டது. நல்ல இடி

மின்னலுடன் மழை பெய்யும் போது வீட்டை எகலப்பொல மகா அதிகாரமும் அவரது ஆட்களும் சூழ்ந்து கொண்டனர். தன் மனைவியையும் குழந்தைகளையும் மன்னன் கண்டி ஏரியில் மூழ்கடித்து கொலைசெய்ததற்காக அவர்களை பழிவாங்கவே அவன் அங்கு வந்திருந்தான். மன்னனையும் இராணி ரங்கம்மாளையும் அரை நிர்வாணமாக்கி அடித்துத் துன்புறுத்தினர். ராணியையும் மன்னனையும் முழு நிர்வாணமாக்கி கண்டிக்கு நடத்தி அழைத்து செல்ல திட்டமிட்டிருந்த போது *John D Oyley* என்ற பிரித்தானிய தளபதியின் தலையீட்டினால் மன்னன் காப்பற்றப்பட்டு. மன்னரையும் இராணிiயுயம் அவர்கள் குடும்பத்தினரையும் இரகசியமாக நீர்கொழும்பு வழியாக கொழும்புக்கு அழைத்து சென்று பின்னர்

*கப்பலில் வேலூருக்கு நாடு கடத்தினர்.*

*நாயக்கர் வம்சத்தின் முடிவு*

*தேசாதிபதி ரொபர்ட் பிறவுன்றிக் (இன்றும் இவர் பெயரால் கொழும்பில் ஒரு வீதியுண்டு) தலைமையில் 1815ம் ஆண்டு மார்ச் 2ம் திகதி கண்டி இராச்சியத்தின் அதிகாரிகளுடன் ஒப்பந்தம் ஒன்று கைசாத்திடப்பட்டது. அதில் கையொப்பமிட்ட அதிகாரிகளில் இருவர் தமிழில் கையொப்பமிட்டனர். டொன் சொலமன் டயஸ் பண்டாரநாயக்கா முதலியார் (சிறீலங்கா ஜனானாதிபதியாக இருந்த சந்திரிக்காவின் பூட்டனார்) மொழிபெயர்பாளராக கடமையாற்றினார். 1816ம் ஆண்டு ஜனவரி 24ம் திகதி கொனவேலிஸ் என்ற கப்பலில் சென்னைக்கு குடும்பம் சகிதம்*

நாடுகடத்தப்பட்டார். மைசூரில் இருந்த திப்பு சுல்தானின் மகன் ஹைதர் அலியின் அரண்மனையில் சுமார் தனது 60 இனத்தவர்களுடன் 52 வயது வரை வாழ்ந்து, 1832ஆம் ஆண்டு ஜனவரி 30ம் திகதி வேலூரில் உயிர்நீத்தார். ஆறடி இரண்டங்குல உயரமும் கருமை நிறமுள்ள மன்னன், 17 வருடங்கள் கண்டியை ஆட்சி புரிந்தான். இவரோடு கண்டி நாயக்கர் சாம்ராஜ்யத்தின் கதை முடிவடைந்தது. இவரது ஆஸ்தி பார் நதியில் கரைக்கப்பட்டது. இவர் நினைவாக இன்று ஒரு கல்லறை வேலூரில் உண்டு.






## மரபுக் கதை 16

## இலங்கையும் இராவணனும்

இலங்கையில் சந்ததி சந்ததியாக இராவணன் இலங்கையை ஆண்டதாக கருதிவருகிறார்கள். அதை நினைவுபடுத்த

இலங்கையில் பல இடங்களில் மரபு வழி வந்த கதைகளுண்டு. இராமாயணத்துக்கும் இலங்கைக்கு நெருங்கிய தொடர்புண்டு என்பது பலர்; அறிந்ததே. இலங்கேஸ்வரன் என்ற இராவணன் ஒரு திராவிடன். கி. மு சுமார் 7300 ஆண்டுகளுக்கு முன்னர் இலங்கையை ஆண்ட சிவபக்தன். இராவணனை இராமாயணத்தில் வில்லனாக ஆரியர்கள் உருவாக்கியுள்ளார்கள். இராமனின் மனைவி சீதையை புஷ்ப விமானத்தில் கவர்ந்து சென்று இலங்கையில், அசோக வனத்தில் சிறைவைத்தாக வால்மீகி இராமயாணம் சொல்கிறது. இலங்கையில் பல இடங்களை. இராவணனோடு தோடர்பு படுத்தி மரபு வழி வந்த கதைகள் பல உண்டு.

இராவணனன் வெட்டு என்ன்ற பெயரில்

மலையை கத்தியால் இரண்டாக வெட்டிய தோற்றத்தோடு திருகோணமலையில் உள்ள கோணசர் மலையில் ஒரு பகுதி உண்டு. அதே திருகோணமலைக்கு *(Trincomalee)* அருகாமையில் உள்ள கிண்ணியா கிராமத்தில் ஏழு சுடுநீர் கிணறுகள் உண்டு. இராவணன். தாயின் ஈமக்கிரிகைகளைச் செய்வதற்கு தண்ணீர் கிடைக்கததால் திருச் சூலத்தைத் தன்; கரத்திணால் நிலத்தில் ஊன்றி நீர் வரவழைத்ததாக கதையுண்டு.

நுவரேலியா என்ற நகருக்கு அப்பெயர் வந்த காரணம் ஹனுமான் அசோக வனத்தை எரித்த ஒளியினால் ஏற்பட்டது என்பர். அசோக வனம் நுவரேலியாவுக்கு அருகேயுள்ள ஹக்கல பூங்காவைச் சுற்றியுள்ள பகுதியாகும். அப்பகுதியில் பல அசோகமரங்களுண்டு. அவ்விடத்தில் சீதை

சிறைவைக்கப்பட்டதன் நினைவாக சீதைக்கு கோயில் இன்றுமுண்டு. சீதை பல்லாங்குழி விளையாடியதைக் எடுத்துக்காட்ட ஏழு குழிகள் கோயிலுக்கு அருகே பாதையில் உள்ளது. ஹனுமான் தன் பாதம் பதித்த அடையாளமும் உண்டு.

குபேரன் இராவணனின் தந்தையின் ஒரு மனைவியின் மகள். இராவணன் தன் அண்ணன் குபேரனோடு யுத்தம் புரிந்து புஷ்பவிமானத்தை வென்றதாகவும், அது போன்ற தன்னிடம் இருந்த விமானங்களை நிறுத்திவைக்க விமானத்தளங்களை இலங்கையில் பல இடங்களில் இராவணன் தோற்றுவித்ததாக மரபுக் கதைகள் உண்டு. இவ்விமானத்தளங்கள் வாரியப்பொல. மகியன்கன இடங்களில் இருந்ததாக நம்புகிறார்கள். இதோடு வரக்காபொல

*(Warakapola)* என்ற இடத்தில் விமானத்தளம் இருந்ததாக கதையுண்டு.

மிக முக்கியமாக தனுஷ் கோடியையும் தலைமன்னாரையும் இணைக்கும் 30 கி.மீ தூரம் கொண்ட,சிதைந்த நிலையில் உள்ள கற்பாலத்தை இராமன் அணை *(Adams Bridge)* என்பார்கள். சுனாமி என்ற பேரஅலைகலால் ஒருகாலத்தில் அப்பாலம் தோன்றியதா என்பது கேள்விக் குறி! அல்லது குமரிகண்டத்தின் மறைவின் போது இந்தியாவையும் இலங்கையையம் இணத்த நிலப்பரப்பு மறைந்து, கற்பாலமாக தோற்றமளிக்கிறதா என்பது மற்றோரு கேள்வி. எது எப்படி இருப்பினும் சேது சமுத்திர திட்டத்துக்கு இராமர் அணை இடைஞ்சலாக இருக்கிறது என்ப்து சில அரசியல் வாதிகளின் வாதம் என்பது

*உண்மை. இந்தப் பாலத்தை சுக்கிரீவனின் வானரப்படை கட்டியாதாக இராமயணம் சொல்கிறது.*

*சிங்களத்தில் மகியன்கனவுக்கு (Mahiyangana) அருகே உள்ள ஊரின் பெயர். வீரகன்தொட்ட சிங்களத்தில் அதன் அர்த்தம்; விமானத்தளம்; விமானம் இறங்கும் இடம் என்பதாகும். இவ்விடத்திலும் இராவணனுக்கு விமானத்தளம் இருந்ததாக கருதுகிறார்கள்.*

*நுவரேலியாவிலிருந்து (Neweraeliya) பதுளைக்கு (Badulla) போகும் பாதையில். வெலிமட(Welimada) என்ற கிராமம் உண்டு. இக்கிராமத்தில் சீதை தன் தனது கற்பின் மேல் இராமனுக்கு ஏற்பட்ட சந்தேகத்தைப் போக்க, அக்கினிப் பரீட்சை நடத்தியதாகச் சொல்வார்கள். இங்கு 6ஆம்*

*நூற்றாண்டில் ஸ்தாபித்த திவிரும்பொல உன்ற புத்த விகாரை ஒன்று உண்டு.*

*வேலிமடவில் இருந்து 22 கிமீ தூரத்தில் உள்ள நகரம் பண்டாரவளை. இந்த நகரத்தில் இருந்து தெற்கே வெள்ளவாய நோக்கிப் போகும் பாதையில் 13 கி மீ தூரத்தில் "எல்ல" (Ella) என்ற கிராமமுண்டு. இக்கிராமத்தில் 1080 அடி உயரமுள்ள நீர்வீழச்சியுண்டு. இதன் நீரில் சீதை குளித்தாகவும், நீர்வீழச்சிக்குப் மேலே உள்ள குகையில் இராவணன் வாழந்ததாகவும் மரபு வழி வந்த கதைகள் பல உண்டு.*

*சிலாபத்திலிருந்து குருணாகலுக்குப் (Kurunegala) போகும் பாதையில் 5 கி.மீ தூரத்தில் பிரசித்தம் பெற்ற முன்னேஸ்வரம் (Muneswram) சிவன் கோவில் உள்ளது.*

அக்கோவிலையும், சிவபக்தனான இரவணனையும் இணைத்து மரபு வழிக் கதையுண்டு. இலங்கையில் உள்ள ஈஸ்வரங்களில் முதலில் தோன்றிய ஈஸ்வரமாகையால் முன்பு + ஈஸ்வரம் முன்னேஸ்வரமாகியது என்று சொல்வார்கள். மற்றைய நான்கு ஈஸ்வரங்கள் அதன் பின் தோன்றியவையே. இராமன், பிராமணான இராவணனைப் போரில் கொன்று. சீதையைச் சிறை மீட்டு, அயோத்திக்குப் புஷ்ப விமானத்தில் அழைத்துச் செல்லும் வழியில், விமானம் முன்னேஸ்வரம் மேலே பறக்கும் போது இராவணனைப் போரில் கொண்டபிரம்மஹத்தி தோஷம் இராமனை பீடித்துக்கொண்டதினால் புஷ்பவிமானம் அதிரத் தொடங்கியது. அதற்கு நிவர்த்தி தேடி சிவனை இராமன் வழிபட்டதாகவும்,

சிவனின் கட்டளையின் படி திருக்கேதீஸ்வரம், நகுலேஸ்வரம், திருக்கோணேஸ்வரம், தொணடேஸ்வரம் ஆகிய 4 ஈஸ்வரங்களை நான்கு திசைகளிலிலும், இலங்கைத் தீவை இயற்கையின் அழிவில் (சுனாமி) இருந்து காப்பாற்ற நிறுவியதாகக் கதையுண்டு. வரலாற்றின்படி இலங்கைத்தீவினைச் சுனாமி பல தடவைகள் தாக்கியுள்ளது. சிலாபத்தைத் தழுவி ஓடும் தெதுறு ஓயாவுக்கு அருகே "மனவாரி" என்ற இடத்தில் இராமர் முதன் முதலாக சிவனுக்கு கோவில் கட்டியதாக மக்கள் கருதுகிறார்கள். இவ்விடம் சிலாபத்துக்கு வடக்கே 6 கிமீ தூரத்தில் உள்ளது.

சீதாகொட்டுவ (Sitakottuwa) என்ற இடத்தில் சீதையை இராவணன்

சிறைவைத்ததினால் அவ்வூருக்கு அப்பெயர் வந்தது என்பது சிங்களவர் எண்ணம். ஆரம்பத்தில் இராவணனின் மனைவி மண்டோதரியின் அரண்மனையின் அந்தப்புரத்தில் சீதை சிறைவைக்கப்பட்டு, அதன் பின் சீதாகொட்டுவ என்ற இடத்துக்கு மாற்றியதாக மக்கள் நம்பிக்கை. ஒரு காலத்தில இவ்விடத்தில் லங்காபுரி நகர் இருந்ததெனவும், நீர்வீழ்ச்சியும், பூந்தோட்டங்களும், சிற்றாறுகளும் நிறைந்த இடத்தில் மண்டோதரியின் அரண்மனை இருந்ததாக நம்புகிறார்கள். இவ்விடம் மகியன்கனவில் இருந்து 7 கிமீ தூரத்தில் உள்ளது. அவ்வூருக்கு அருகே "குருலுபொத்த" *(Kurulupotha)*என்ற இடத்தில் இராவணின் புஷ்பவிமானம் திருத்தும் இடமாக இருந்தது. விமானம் என்றால் சிங்களத்தில் பறக்கும் மயிலைக் குறிக்கும்.

இராவணனின் விமானம் பெரிய மயில் போன்ற தோற்றமுள்ளது. குருலுபொத்த என்றால் பறவையின் பகுதியெனப்படும்.

அக்காலத்தில் மன்னர்கள் தப்பி ஓடுவதற்கு சுரங்கங்கள் அமைத்தனர். பல தமிழ் சினமா ராஜா-ராணி படங்களில் கதையில் எதிரியிடம் இருந்து தப்பி ஓடுவதற்கு சுரங்கங்கள் பாவிக்கப் படுவதைக் காட்டியுள்ளார்கள். இராவணன் பல சுரங்கங்களை தன் ஆட்சி காலத்தில் ஸ்தாபித்திருந்தான். இச்சுரங்கங்கள் முக்கியமான நகரங்களையும். விமானத்தளங்களையும், பண்ணைகளையும் இணைத்திருந்தன. இசுசுரங்கங்களின் வாய்கள் பண்டாரவளையில் உள்ள இராவணன் குகைவாசல்கள், சேனாபிட்டிய, ரம்பொட, லகேகெல, வாரியப்பொல,

சீதாகொடுவ, ஹசலக, ஆகிய இடங்களில்' இருந்ததாக மக்கள் நம்புகிறார்கள்.;

மனிகட்டுதர் என்ற இடத்தில் உள்ள லபுகல தெயிலைத் தொட்டத்தில் ஹனுமான் சீதையைக கண்டதாகவும், ஹனுமான் அச்செய்தியை இராமனுக்கு அறிவித்தபின் அக்குகையில் ஓய்வு பெற்றான் என்ற கதையுண்டு. இக்குகைமேல் இன்று இராமர், இலட்சுமணன், சீதை, ஹனுமான் ஆகியோருக்கு கோயில் ஒன்று உண்டு. லபுகல கண்டி நுவரேலியா A5 பாதையில், நுவரேலியாவில் இருந்து 15 கிமீ தூரத்தில் உள்ள ஊராகும்.

இலங்கையில் நடந்த இராம இராவண யுத்தத்தில் போரிட்டு இலட்சுமணன் காயமுற்றான். அவனது உயிரைக் காப்பாற்ற மூலிகைகள் தேவைப்பட்டது.

காயங்களுடன் கிடந்த இலட்சுமணனைக் காப்பாற்ற மூலிகைகள் இந்தியாவில் இருந்து கொண்டு வரவேண்டியிருந்தது. ஹனுமான் இந்தியாவின் வடக்கு திசையில்; உள்ள சஞ்சீவிமலையில் இருந்து மூலிகைகள் எடுத்து வரப் பறந்து சென்றான். மூலிகைகள் நிறைந்த சஞ்சீவிமலை முழுவதையும் கொண்ட வர அவனால் முடியாததால் மலையின் ஒரு பகுதியைப் பெயர்ந்து எடுத்து மூலிகைகளோடு இலங்கை நோக்கிப் பறந்து சென்றதாகவும், பறக்கும் போது தள்ளாடிய நிலையில் பறந்ததாகவும், அப்போது கையில் சுமந்து சென்ற சஞ்சீவி மலையின் சிறு பகுதிகள் இலங்கையில் பல இடங்களில் விழுந்ததாக மரபு வழிக் கதைகளுண்டு. அவ்வாறு சஞ்சீவி மலையின் பகுதிகள் விழுந்த இடங்கள், யாழ்ப்பாணத்துக்கு

அருகேயுள்ள கச்சைத்தீவு, மன்னாருக்கு அருகேயுள்ள தல்லாடி. காலி நகருக்கு வடக்கே 10 கிமீ தூரத்தில் கடலோர ஊரான உனவட்டுன (Unawatuna) , குருநாகலுக்கு வடக்கே 20 கிமீ தூரத்தில் உள்ள ஹிரிபிட்டிய ஊரில் உள்ள தொலுகந்த (Dolukanda) என்ற குன்று உள்ள இடங்களை குறிப்பிடலாம். இவ்விடங்களை வைத்து. ஹனுமான் பறந்து சென்ற பாதையை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

மன்னாருக்கு அருகேயுள்ள தல்லாடி (Thalladi) என்ற ஊர் பெயர் ஹனுமான் தல்லாடிக் கொணடு கையில் எடுத்துச் சென்ற சஞ்சீவி மலையில் இருந்து ஒரு சிறு பகுதியை அவ்விடத்தில் விழுத்தியதால் அவ்விடத்துக்கு அப்பெயர் வந்தது என்ற

விளக்கமுண்டு. அதே போல் இன்னொரு பகுதி ஊனவட்டுன என்ற ஊரிற்ல் விழுந்தது. அதன் அர்த்தம் சிங்களத்தில் “அதோ விழுந்துவிட்டது” என்பதாகும். இவ்விடங்களில் பல வகை மூலிகைகள் இருப்பதினால் இம்மரபு வழிக்கதைகள் தோன்றியிருக்கலாம்.

திருக்கேதீஸ்வரம் ஐந்து ஈஸ்வரங்களில் ஒன்று. இது மன்னாருக்கு அருகே உள்ள கோயிலாகும். 1575ஆம் ஆண்டில் இக்கொயில் மத துவேஷம் கொண்ட போர்த்துக்கேயர்களால் சிதைக்கப்பட்டு, 1903 ஆண்டு புதிப்பிக்கப்பட்டது. இராவணனின் மனைவி மண்டோதரி இவ்விடத்தவள். இவது தந்தை இக்கோவிலைக் கட்டியதாக நம்பிக்கை.

இராமன் பிரமாஸ்திரத்தை இராவணன்

மேல்; துனுவில என்ற ஏரி இருந்த இடத்திலிருந்து எய்ததினால் அவ்வூருக்க்கு அப்பெயர் வந்தது என்பர். “துனு” என்றால் அம்பைக் குறிக்கும் வில் என்பது ஏரியைக்குறிக்கும். இதை இணைத்து பெயர் உருவாகியிருக்கலாம்.

லக்கல என்ற இடத்தில் இராவணனின கண்காணிப்பு நிலையம் இருந்ததாக மக்கள் நம்புகிறார்கள். இக்குன்றத்திலிருந்து இராமர் படை வருவதை இராவணன் கண்டாதாக சொல்லுகிறார்கள். லக்கல குன்றின் மேல் பகுதி தட்டையானது. இது பிரம்மாஸ்திரம் தாக்கியதால் தோன்றியது என்பதும் ஒரு மரபுக்கதையாகும்.

யகன்கல என்ற இடத்துக்கும் இராவணனுக்கும் தொடர்புண்டு. இவ்விடத்தில் போரில் மடிநத

இராவணணின் உடல். மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்ததாம். உண்மையில் இராவணன் இறக்கவில்லை என்றும் மூர்ச்சித்த நிலையில் அருகேயுள்ள குகையில் வைக்கப்பட்டிருந்ததாக மக்கள் கருதுகிறார்கள். ஒரு நாள் இராவணணன் உயிர்த்தெழுவான் என மக்கள் நம்பி வருகிறார்கள்.

இக்கதைகள் மக்களால் உருவாக்கப்பட்டவை. பல ஊர்ப் பெயரோடு பொருத்தமானவை. வெளிநாட்டுச் சுற்றிலாப் பயணிகளுக்கு இராவணன் பெயரைச் சொல்லி இவ்விடங்களைக் காட்டி பணம் சம்பாதிப்பவர்களும் உண்டு.



# மரபுக் கதை 17 - நாகதீபம்



*மரபுக் கதை 17*

## நாகதீபம் (மணிபல்லவம்)

இலங்கையின் வடமகாணத்தில்., யாழ்ப்பாண மாவட்டத்தில் தென் மெற்குத் திசையில் அமைநத சப்பத தீவுகள் என அழைக்ப்படும் ஏழு தீவுகளில் நயினாதீவும் ஒன்று. இது வரலாறுகொண்ட தீவாகும். இதனை மணிபல்லவம் எனவும் ஆழைப்பார். இந்துக்களுக்கும் பௌத்தர்களுக்கும் முக்கியமான தீவாகும். இத்தீவு யாழ்ப்பாணத்திலிருந்து 23 மைல் தூரத்தில் அமைந்துள்ளது. இதற்கு கிழக்கு திசையில் புங்குடுதீவும், நேர் வடக்கே அனலைதீவும் அமைந்துள்ளன. இரு நாக வம்ச அரசர்கிளிடையே மணியாசனத்தின

உரிமைக்கு ஏற்பட்ட பிணக்கை தீர்த்து வைக்க புத்தர் இந்தத் தீவுக்கு வந்ததாக மகாவம்சம் என்ற சிங்கள நூல் கூறினாலும் போதிய . ஆதரமில்லை. இத்தீவுக்குப் பல பெயர்களுண்டு. இப்பெயர்கள் மரபு வழி வந்த கதைகளை அடிப்படையாக வைத்து தோன்றியவையாகும்.

இத்தீவுக்கு நாகத்தீவு, மணிபல்லவத் தீவு, மணித்தீவு, பிராமணத்தீவு, ஹார்லம், சம்புத்தீவு, நரித்தீவு, நாகேஸ்வரதம் எனப் பெயர்களுண்டு. எத்தனைபெயர்கள் இருந்தாலும புலக்கத்தில் உள்ள பெயர் நயினாதீவாகும். ஹார்லம் (Harlem) என்ற பெயர் டச்சுகாரர்கள் தமது யாழ்ப்பாண ஆட்சியின் போது இத்தீவுக்கு வைத்த பெயராகும் நாகதிவியன என்று இத்தீவை சிங்களவர் அழைப்பர்.

விஜயன் இலங்கைக்கு வரமுன்னமே நாகரசன் என்ற நாகர் இளத்தைச் சேர்நத மன்னன் இத்தீவில் ஆட்சி செய்தான். இவ்வரசனுக்கு ஒரு மகளும் மகோதரன் என்ற மகளும் இருந்தார்கள். தன் மகளை நாகராசன் என்ற மன்னனுக்கு மணமுடித்து வைத்து சீதனமாக தன் மணியாசனத்தை கொடுத்தான். அவர்களுக்கு குலோதரன் என்ற மகன் பிறந்தான். நயினாதீவு அரசன் நாகராசன் தான் இறக்க முன்பு தன் மகன் மகோதரனுக்கு பட்டம் கட்டிவிட்டு இறந்தான். மகோதரன் தான் மன்னனாதும் தன் மருமகன் குலோதரன் மீது மணி ஆசனத்தைப் பெறுவதற்காக போர் தொடுத்தான். இப்போர் நயினாதீவில் இடம்பெற்றது. போர் நடக்கும் போது அவர்கள் நடுவே புத்தர் தோன்றினார். அவர் தோன்றிய ஒளியினால் இரு

*நாகர்களும் பயந்தனர். புத்தர் இவர்களிடையே சமாதானத்தை நிலவினார். இரு நாகர்களும் புத்தரை வணங்கி அவரை மணியாசனத்தில் அமரச் செய்தனர். இதே கதையை மணிமேகலை என்ற காப்பியமும் சொல்கிறது. மணிஆசனம் இருந்ததினால மணிபல்லவம் என்ற பெயார் நயினாதீவுக்கு வநதிருக்கலாம்.*

*மணிமேகலைக்கும் மணிபல்லவம் என்ற நயியாதீவுக்கும் என்ன தொடர்பு? மணிபல்லவம் ஒரு சிறிய தீவு. காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்து தெற்கே 240 மைல் (முப்பது யோசனை) தூரத்தில் அமைந்திருந்தது என்று 'மணிமேகலைக் காப்பியம் கூறுகிறது.*

*மணிபல்லவத் தீவின் காவல் தெய்வம் மணிமேகலை. கோவலன் மகள்*

மணிமேகலையைத் தூக்கிச் சென்று காப்பாற்றியதாகக் கூறப்படும் தெய்வமும் இதுவே. சோழனுக்கும் பீலிவளைக்கும் பிறந்த குழந்தையை, புத்தமுனிவன், புகாரிடமிருந்து நாக நாட்டுக்கு வந்து தன்னை வழிபட்ட கம்பளச்செட்டி என்னும் வணிகனிடம் கொடுத்து, இக்குழந்தை சோழன் குழந்தை என்னும் வரலாற்றையும் கூறி, சோழனிடம் கொடுக்கச் சொன்னான். வணிகன் கம்பளச்செட்டி குழந்தையுடன் தாயகம் மீளும்போது அவனது மரக்கலம் புயலில் சிக்கிக் கவிழ்ந்துபோக, குழந்தை மாண்டது. நீந்திப் பிழைத்து வந்த வாணிகன், சோழ அரசன் வடிவேற்கிள்ளி என்பவனிடம் நிகழ்ந்ததைக் கூறினான். சோழன் குழந்தையைக் கடலிலும், கடற்கரையிலும், காடுகளிலும் தேடித் திரியும் துக்கத்தில் இந்திரவிழா கொண்டாட

மறந்துவிட்டான். அக்காலத்தில் இந்திர விழா புகார் நகரிலும், நாகநாட்டு மணிபல்லவத் தீவிலும் கொண்டாடப்படும விழா. இது கொண்டாடப்படாததால் மணிபல்லவத் தீவிலிருந்த மணிமேகலைத் தெய்வம் சாபமிட்டது. சாபத்தால் புகார் நகரமும், நாகநாட்டு 400 யோசனை நிலப்பரப்பும் கடற்கோளுக்கு இரையானது என்ற காரணத்தையும் சொல்வார்கள். இந்த கடற் கோலினால் சப்த தீவுகள் தோன்றியிருக்கலாம். 2300 ஆண்டுகளுக்கு முன்னர் களனி இராச்சியத்தை ஆண்ட களனிதிஸ்ஸ ஆட்சியின் போது ஏற்பட்ட கடற்கோள் இதுவாக இருக்கலாம். பூம்புகார் நகரமும், அதனை அடுத்திருந்த தீவாகிய 400 யோசனை நாகநாடும் நிலநடுக்கத்தால் அழியும் என புத்தமுனிவர் சொன்னார். அவர் சொன்படி பூம்புகார்

நகரை கடலகொண்டது என்பது இன்னொரு விளக்கம்.

காப்பியத் தலைவி மணிமேகலை கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மகள்; கோவலன் தந்தை கொலையுண்டதை அறிந்த மாதவி தன் அக வாழ்வைத் துறந்து, அறவண அடிகள் என்னும் துறவியிடம் அறங்கேட்டுத் தெளிந்து பௌத்தத் துறவியானாள். தன்மகள் மணிமேகலையையும் துறவி ஆக்குகிறாள். அப்போது புகார் நகரில் இந்திர விழா தொடங்கியது. முறைப்படி மாதவியும் மணிமேகலையும் ஆடல் பாடல்களில் கலந்து கொள்ள வேண்டும். கலை வாழ்க்கையைத் துறந்ததனால் இருவரும் விழாவில் கலந்து கொள்ளவில்லை. இதனால் சினமுற்ற மாதவியின் தாய் சித்திராபதி, வயந்தமாலை

என்பவளை அனுப்பி மாதவியை விழாவில் ஆட வருமாறு அழைக்கிறாள். மாதவியோ, மறுத்து விடுகிறாள். மணிமேகலையைக் கற்பரசி கண்ணகியின் மகள் என்றும், அவள் தீய தொழிலில் ஈடுபட மாட்டாள் என்றும் அறிவிக்கிறாள்.

கோவலன் கொலைப்பட்ட துன்ப நிகழ்ச்சியைப் பற்றி மாதவி கூறக் கேட்ட மணிமேகலை கண்ணீர் வடிக்கிறாள். அவள் கண்ணீர்த் துளி புத்த பெருமானுக்காகத் தொடுத்த பூமாலையில் பட்டுப் புனிதம் இழக்கச் செய்கிறது. அதனால் புதிய பூக்கள் பறித்து வந்து மாலை தொடுக்க மணிமேகலையும், அவள் தோழி சுதமதியும் உவவனம் என்னும் பூங்காவுக்குச் செல்கின்றனர்.

அப்போது, மதங்கொண்ட யானையை

அடக்கிய சோழ மன்னனின் மகன் உதயகுமரன், மணிமேகலை மலர் வனம் புகுந்ததை அறிந்து அவளைத் தேடி உவவனம் வருகிறான். உதயகுமரன் தன்பால் மிகுந்த காதல் கொண்டுள்ளான் என்பதை உணர்ந்த மணிமேகலை, செய்வதறியாது அங்குள்ள பளிக்கறை மண்டபத்தில் ஒளிந்து கொள்கிறாள். அவளைப் பற்றிச் சுதமதியிடம் உதயகுமரன் கேட்க, அவளோ "மணிமேகலை தவ ஒழுக்கம் உடையவள்; சபிக்கும் வன்மையும் காமம் கடந்த வாய்மையும் உடையவள்" என்கிறாள். பளிக்கறைக்குள் மணிமேகலையின் உருவத்தைக் கண்ட உதயகுமரன், உள்ளே செல்ல வழியறியாது தடுமாறுகிறான். மணிமேகலையைச் சித்திராபதியால் அடைவேன் எனச் சினத்துடன் கூறி நீங்குகிறான்.

பளிக்கறை விட்டு வெளிவந்த மணிமேகலை, தன் நெஞ்சம் அவன்பால் செல்வது கண்டு, “அவன் என்னை இகழ்ந்து பேசினான். இருந்தும் என் நெஞ்சம் அவனை நோக்கிச் செல்கிறது. காதலின் இயற்கை இது தானா? அப்படியாயின் அது கெட்டு அழியட்டும்” என்று தோழியிடம் கூறுகிறாள். அப்போது, இந்திரவிழாக் காண வந்த மணிமேகலா தெய்வம் அவர்களை அணுகி, “இது முனிவர் வனமாதலின் உதயகுமரன் தீங்கு செய்யாது சென்றனன்; நீவிர் இருவரும் சக்கரவாளக் கோட்டம் செல்க” என அறிவுறுத்துகிறது. சக்கரவாளக் கோட்டத்தில் சுதமதி சிறிது கண் துயில்கிறாள். மணிமேகலா தெய்வம் மணிமேகலையை மயக்கி மணிபல்லவம் எடுத்துச் செல்கிறது. பின் அத்தெய்வம் உதயகுமரனைக் கண்டு “தவத்திறம் பூண்ட

மணிமேகலைபால் வைத்த வேட்கை ஒழிக" என அறிவுறுத்துகிறது. தொடர்ந்து மணிமேகலா தெய்வம் சுதமதியிடம் சென்று, "மணிமேகலை மணிபல்லவத்தில் இருக்கிறாள்; அங்குத் தன் பழம் பிறப்பை அறிந்து ஏழு நாட்களில் திரும்பி வருவாள்" என்கிறது. சக்கரவாளக் கோட்டத்திலுள்ள கந்திற்பாவையும், மணிமேகலை ஏழு நாட்களில் "தன் பிறப்பதனோடு நின்பிறப்பும் உணர்ந்து வருவாள்" என்கிறது. அப்போது பொழுது விடிகிறது. சுதமதி மாதவியிடம் வந்து நிகழ்ந்தவற்றைக் கூறி வருந்தி இருக்கிறாள்.

மணிபல்லவத்தில் தனித்து விடப்பட்ட மணிமேகலை உவவனத்தையோ சுதமதியையோ காணாது புலம்புகிறாள். தன் தந்தை கோவலனை நினைக்கிறாள்.

பலவாறு புலம்பும் மணிமேகலையின் முன் புத்த பெருமானின் மறுவடிவான தரும பீடிகை காட்சியளிக்கிறது. கண்ணில் நீர் வழிய, கைகள் தலைமேல் குவிய, பீடிகையை மும்முறை வலம் வந்து முறைப்படி தொழுகிறாள். தொழுத அளவில் தன் முந்திய பிறவி பற்றி அறிகிறாள். தான் அசோதர நகர் அரசன் இரவிவர்மனுக்கும் அவன் மனைவி அமுதபதிக்கும் இலக்குமி என்னும் மகளாகப் பிறந்து, அத்திபதி அரசன் மகன் இராகுலனை மணந்ததை அறிகிறாள். இராகுலன் 'திட்டிவிடம்' என்னும் பாம்பு தீண்டி இறந்துபடத் தான் தீப்புகுந்து இறந்ததுமாகிய பழம்பிறப்பினை உணர்கிறாள். பின், அங்குத் தரும பீடிகை தொழுது நிற்கும் மணிமேகலா தெய்வத்தின் மூலம் மாதவி, சுதமதி ஆகியோர் தம் முற்பிறப்பு வரலாற்றை அறிகிறாள்.

முற்பிறப்பில் இராகுலன் ஆக இருந்தவன்தான் உதயகுமரன் என்பதையும் அறிகிறாள். மணிமேகலா தெய்வம், மணிமேகலைக்கு இனி எதிர்காலத்தில் நிகழ விருப்பதைக் கூறுகிறது. வேற்று உருவம் கொள்ளுதல், பசியைத் தாங்கிக் கொள்ளுதல், வான்வழிச் செல்லுதல் ஆகிய ஆற்றல்களைத் தரும் மூன்று மந்திரங்களை மணிமேகலைக்கு அருளிச் செல்கிறது.

பின் மணிமேகலை அங்குள்ள மணற்குன்றுகள், பூஞ்சோலை, பொய்கை முதலானவற்றைக் கண்டு களிக்கிறாள். அவள்முன் தீவ திலகை என்னும் தெய்வம் தோன்றி, “கோமுகிப் பொய்கையில் அமுதசுரபி தோன்றும் நாள் இது; ஆபுத்திரன் கையில் இருந்த அப்பாத்திரம் உன் கைக்குக் கிடைக்கும்” என்று கூறி

அழைத்துச் செல்கிறது. இருவரும் கோமுகிப் பொய்கையை வலஞ்செய்து வணங்க, அமுதசுரபி மணிமேகலையிடம் வந்து சேர்கிறது.

அமுதசுரபியில் இடும் அன்னம் எடுக்க எடுக்கக் குறையாது பெருகும் என்று அதன் சிறப்பினைத் தீவதிலகை மணிமேகலைக்கு எடுத்துரைக்கிறாள்.

மணிபல்லவத்தில் ஆபுத்திரனின் அமுதசுரபியைப் பெற்ற மணிமேகலை வறியவரின் பசிப்பிணி தீர்க்க வான்வழியே புகார் வருகிறாள். அங்கு மாதவியையும் சுதமதியையும் கண்டு அவர்தம் பழம்பிறப்பும் அமுதசுரபியின் சிறப்பும் கூறுகிறாள். இங்குப் பழம்பிறப்பில் ‘இலக்குமி’யாகப் பிறந்த மணிமேகலைக்குத் தாரை, வீரை என்ற தமக்கை (அக்காள்) யராகப் பிறந்தவர்களே

மாதவி, சுதமதி என்பது தெரிய வருகிறது. பின்பு மூவரும் அறவண அடிகளைக் கண்டு தொழுது நிகழ்ந்தவற்றை எடுத்துரைக்கின்றனர். அடிகள் அவர்களின் பழம்பிறப்பை உணர்த்தி, அவர்களைப் புத்த நெறிப்படுத்துகிறார். இங்கு, அவரால் ஆபுத்திரன் வரலாறு சொல்லப்படுகிறது.

ஆபுத்திரன் சிந்தாதேவி என்னும் தெய்வத்தின் அருளால் அமுதசுரபி பெற்றுப் பசிப்பிணி தீர்த்து வருகிறான்; இதனால் அவன் புகழ் பரவுகிறது. பொறாமை கொண்ட இந்திரன் நாட்டை மழையால் செழிக்கச் செய்கிறான். இதனால் அமுதசுரபிக்குத் தேவையில்லாமல் போகிறது. எனவே சாவக நாடு சென்று பசிப்பிணி போக்கச் செல்லும் ஆபுத்திரன் மணிபல்லவத்தில் தனித்து விடப்படுகிறான்.

அங்கு மக்களே இல்லாததால் வருந்திய ஆபுத்திரன் அமுதசுரபியைக் கோமுகிப் பொய்கையில் எறிந்து விட்டு உண்ணா நோன்பிருந்து உயிர் விடுகிறான். அவன் செய்த அறப்பயனால் சாவக நாட்டில் ஒரு பசு வயிற்றில் தோன்றி, பூமிச்சந்திரன் என்ற அரசனால் தத்தெடுக்கப்பட்டு அரசனாகி நல்லாட்சி செய்கிறான்.

இவ்வாறு ஆபுத்திரன் வரலாறு கூறிய அடிகள் மணிமேகலையைப் பசிப்பிணி தீர்க்கும் பேர் அறத்தை மேற்கொள்ளப் பணிக்கிறார். அவளும் துறவுக் கோலங்கொண்டு, காயசண்டிகை வழிப்படுத்த ஆதிரையிடம் பிச்சை ஏற்றுப் பசிப்பிணி தீர்க்கிறாள்; காய சண்டிகையின் ‘யானைத் தீ’ என்னும் அடங்காப் பசிநோயும் நீங்க அவள் தன்னுடைய நாடு

புறப்பட்டுச் செல்கிறாள்.

மணிமேகலையின் துறவு வாழ்வை விரும்பாத சித்திராபதி உதயகுமரனைத் தூண்டி விடுகிறாள். அவன் மணிமேகலையை அடைய முயற்சி செய்ய, அவள் காய சண்டிகையாக உருவத்தை மாற்றிக் கொண்டு அறம் செய்கிறாள். காய சண்டிகை உருவில் இருப்பவள் மணிமேகலை என உணர்ந்த உதயகுமரன் பாதி இரவில் அவளைக் காண வருகிறான். இதனை அறிந்த காய சண்டிகையின் கணவன் காஞ்சனன், தன் மனைவியிடம் உதயகுமரன் தவறுதலாக நடந்து கொண்டதாக நினைத்து அவனைக் கொன்று விடுகிறான். மணிமேகலை இதனை உணர்ந்து புலம்ப, அவளைக் கந்திற்பாவை தடுத்துத் தேற்றுகிறது.

இளவரசன் கொலைக்குக் காரணமான மணிமேகலையை அரசன் கைது செய்கிறான். அவன் தேவி, அவளைப் பலவாறு துன்புறுத்த, மணிமேகலை தான்பெற்ற மந்திரத்தால் அனைத்துத் துன்பத்திலிருந்தும் விடுபடுகிறாள். சிறையிலும் அறம் செய்கிறாள். இதனால் அஞ்சிய தேவி மணிமேகலையை வணங்க, அவள் காமம், உயிர்க்கொலை, பொய் முதலானவற்றின் குற்றங்களைத் தேவிக்கு எடுத்துரைக்கிறாள்.

மீண்டும் மணிமேகலையைக் கலை வாழ்வில் ஈடுபடுத்தச் சித்திராபதி அரசமாதேவியிடம் வேண்டுகிறாள். தேவி மறுத்து விடுகிறாள். அதே நேரத்தில் மணிமேகலையை மீட்க அறவண அடிகள், மாதவி, சுதமதி வருகின்றனர். தேவிக்கு அறவுரை கூறிய

அறவணர் வேற்று நாடு செல்கிறார்.

சிறையிலிருந்து விடுதலை பெற்ற மணிமேகலை, ஆபுத்திரன் புண்ணியரசனாய் ஆட்சி புரியும் சாவக நாடு செல்கிறாள். அங்குத் தருமவாசகன் எனும் முனிவன் இருப்பிடம் உள்ளது. அங்கு வந்த ஆபுத்திரன் மணிமேகலையை யார் என அறிகிறான். அவனது பழம்பிறப்பை அறிய மணிபல்லவத்துக்கு மணிமேகலை அழைத்துச் செல்கிறாள்; அங்குத் தரும பீடிகையை வணங்கித் தன் முற்பிறப்பு வரலாற்றை அறிகிறான். பின் தீவ திலகையும் மணிமேகலையும் ஆபுத்திரனை அவன் நாடு செல்லப் பணிக்கின்றனர்; மணிமேகலை வான்வழியாக வஞ்சி நகர் அடைகிறாள்.

வஞ்சி நகர் வந்த மணிமேகலை கண்ணகிக்

கடவுளை வணங்குகிறாள். பத்தினி கடவுளாகிய கண்ணகி தன் பழம்பிறப்பு வரலாற்றை மணிமேகலைக்கு விரித்துரைக்கிறாள். பின்னர் வேற்றுருக் கொண்டு பிற சமயக் கருத்துக்களை அறிந்து வர வேண்டுகிறாள். மணிமேகலையும் 'மாதவன்' வடிவு கொண்டு பிரமாணவாதி முதல் பூதவாதி வரை, அனைத்துச் சமயவாதிகளின் கொள்கைகளைத் தெரிந்து கொள்கிறாள். பின் அங்குள்ள பௌத்தப் பள்ளியில் தவம் செய்யும் கோவலன் தந்தை மாசாத்துவானைக் காணுகிறாள். அவன், தன்வரலாறு கூறியதுடன், மாதவியும் சுதமதியும் கச்சி மாநகர் சென்றுள்ளதை அறிவிக்கிறான். அங்கு மழையின்றி மக்கள் பசியால் வாடுவதை எடுத்துக் கூறி, அங்குச் சென்று பசிப்பிணி நீக்குமாறு

வேண்டுகிறான்.

மணிமேகலை தன் உண்மை வடிவுடன் கச்சி மாநகர் அடைந்து, அந்நாட்டு அரசன் இளங்கிள்ளிக்கு நல்லறம் கூறி, நாட்டு மக்களின் பசிப்பிணி போக்குகிறாள். அங்குத் தீவ திலகைக்கும், மணிமேகலா தெய்வத்துக்கும் படிமமும் கோவிலும் எழுப்பப்படுகின்றன. அறவணர், மாதவி, சுதமதி ஆகியோர் அவளது அறச்சாலை அடைந்தனர். அவர்களை, மணிமேகலை இனிதே வரவேற்க, அடிகள் காவிரிபூம்பட்டினம் கடலால் அழிந்ததை எடுத்துரைக்கிறார். மணிமேகலை, தான் பல சமயக் கணக்கர் கொள்கைகளை அறிந்தும், அவற்றில் சிறப்பில்லை என்று உணர்ந்ததாகக் கூறுகிறாள். பௌத்த சமயத் தருக்க நெறிகளை அறவணர் அவளுக்குப்

போதிக்கிறார். மணிமேகலை புத்தம் சரணம் கச்சாமி; தர்மம் சரணம் கச்சாமி; சங்கம் சரணம் கச்சாமி என்ற மந்திரத்தை மும்முறை தியானம் செய்து தன் பவத்திறம் நீங்க நோன்பு மேற்கொள்கிறாள்.





## மரபுக் கதை 18

## மாருதப்புரவீகவல்லி

மாவிட்டபுரம் முருகன் கோவில் தோன்றிய வரலாறு சோழ இளவரசியான மாருதப்புரவீகவல்லியோடு தொடர்புடையது. இக்கோயில் கீரிமலைக்கு அருகே உள்ளது. மாவிட்டபுரம் என்பது குதிரை முகம் நீங்கிய இடம் என்பதாகும். இவ்விடத்துக்கு இப்பெயர் வரமுன்னம்; கோயிற்கடவை என்ற பெயர் இருந்தது. இதோடு இடப்யெர் தொடர்புடைய மரபு வழி வந்தக் கதை பல வரலாற்று நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கீரிமைலை புனித நீர் ஊற்றுத் தலமாக கருதப்படுகிறது. மாவிட்டபுர முருகன் கீரிமலைக்கு தீர்தமாடச் செல்வது வழக்கம். இது ஆடி அமாவாசை தினமன்று இடம் பெறும். ஒரு காலத்தில் அப்பகுதயிலி கீரிகள்

அதிகமாக இருந்ததினால் கீரிமலை என்ந பெயர் வந்ததென்பர். இவ்விடத்தில் நகுல முனிவர் குகையில் இருந்து, தியானம் செய்து கீரி முகம் மாறப் பெற்றார் என்ற மரபுக் கதையுண்டு.

ஐந்து ஈஸ்வரங்களில் ஒன்றான நகுலேஸ்வரம் இவ்விடத்தில் அமைந்துள்ளது. இராமர் இராவணனுடன் போர் புரிந். கீரிமலையில் தீர்த்தமாடி சென்றார் என்ற மரபு வழி வந்த கதையில் குறிப்பிடப்பட்டுள்ளது. முன்னொரு காலத்தில் மேரு மலையில் தவம் செய்து கொண்டிருந்த சுதாமா எனும் முனிவரது தவத்திற்கு யமத்கினி என்ற வேடன் இடையூறு செயததனால் முனிவரின் சாபத்துக்கு ஆளாகி கீரிமுகம் பெற்றதாகவும, அவ்வேடன கீரிமலைக்கு வந்து தீர்hத்தமாடி

கீரிமுகம்
நீங்கப்
பெற்றதாகவும் அதனால் நகுலகதி என பெயர் பெறதாகவும் மருபுவழிக்; கதையுண்டு. கீரிமலைக்கு கண்டகி என்ற பெயரும் ஒரு காலத்தில் இருந்தது.

சோழ மண்டலத்தை ஆண்ட திசையுக்கிரசிங்க மன்னனின் மகள் மாருதப்புரவீகவல்லி.

கி.பி 9-ஆம் நூற்றாணடில் வாழந்த உக்கிரசிங்கன் என்ற மன்னன் குதிiமுகம் நீங்கி அழகியத் தோற்றத்;தோடு இருந்த மாருதப்புரவீகவல்லி பற்றி அறிந்தான். அவளை சந்தித்து அவள் மேல் காதல் கொண்டான். தான் உக்கிரசிங்கனை மணம் முடிக்க வேண்டுமாகில் முருகன் கோவில் ஒன்றினைக் கட்ட சம்மதிக்க வேண்டும்

என்றாள். அவளது வேண்டுகோளின்படி மன்னனும் சம்மதம் தெரிவித்தான். இடங்களில் மாவிட்டபுரம் முதலாகத் தென் திசைகளில் ஐந்து முருகன் கோவில்களை ஸ்தாபித்தாள். மாருதப்புரவீரகவல்லி முருகன் விக்கிரகத்தை தென் இந்தியாவில் இருந்து தன் தந்தை மூலம் வரவழைத்தாள்.; காங்கேயன் (முருகன்) விக்கிரகம் இந்தியாவில் இருந்து வந்திறங்கிய துறைமுகம் காங்கேசன் துறையாயிற்று. அத் துறைமுகம் மாலிட்டபுரத்துக்கு வடக்கே இரு மைல் தூரத்தில் உள்ள ஊராகும்.

இளவரசி மாருதப்புரவீகவல்லி கூனல் தோற்றமுள்ள முனிவர் ஒருவரைக் கிண்டல் செய்ததினால் அவர் கொடுத்த சாபத்தால்; குதிரை முகமும் குஷ்ட ரோகமும் அவளைப் பீடித்துக்கொண்டது, பல சிகிச்சைகள்

செய்தும் அவளுக்கு நோய் மாறவில்லை. அவள் தரிசிக்காத கோவில்கள் இல்லை. அவளது நோய் தீராததைக் கண்டு, தவசி ஒருவரின் வாக்குப்படி வட இலங்கையில் உள்ள கீரிமலை என்ற திவ்விய தீhத்தத்தில் நீராடச்; சென்றாள். அவளுக்குத் துணையாகச் செவிலித்தாய், பணிப்பெணகள் போர்வீரர்களும்; சென்றார்கள். அவர்கள் தங்கியிருந்த இடம் “குமாரத்தி பள்ளம்” எனவும்> அவள் குளித்த கிணறு இருந்த இடம் வல்லிக் கிணற்றடி என இடப்பெயர்களுடையன. இவ்விடங்கள் மாவிட்டபுரத்து அருகே உள்ளதாக பேராசரியர் இ. பாலசுநதராம அவர்கள்; தனது “ஈழத்து இடப் பெயர்” ஆய்வு என்ற நூலில் குறிப்பிட்டுள்hர்.

மாருதப்புரவீகவல்லியை மணந்த

உக்கிரசிங்கனே தொண்டமான் என்ற தளபதி, உப்பு வணிகம் செய்வதற்கும், உப்பை ஏற்றுமதிசெய்ய பருத்தித்துறை துறைமுகத்தில் இருந்து தமிழ் நாட்டுக்கு எடுத்துச் செல்ல கால்வாய் ஒன்றை வெட்ட துணைபரிந்ததாக மரபு வழிக் கதை சொல்கிறது. இக்கால்வாயே தொண்டமனாறு என்ற பெயாரில் இன்று அழைக்ப்படுகிறது.

மாருதப்புரவீகவல்லியின் குதிரை முகம் பிறர், பார்வைக்கு நீங்கினாலும் அவளது சொந்த பார்வையிலிருந்தும் நினைவில் இருந்தும் நீங்கப் பெறவில்லை. அதன் காரணம் என்ன என்று ஆராய்ந்த போது முருகன் வழிபாடடுக்கு முதல் பிள்ளையாருக்கு வழிபாடு செய்யாததே காரணம் எனத் தெரியவந்தது. தான் செய்த

தவறுக்கு பிராயசித்தமாக ஏழு இடங்களில பிள்ளையாருக்கு கோவில் அமைத்து மாருதப்புரவீகவல்ல வழிபட்டாள். கொல்லங்கலட்டி, வரத்தலம, ஆலங்கொலலை, கும்பழாவளை, பெருமாக்கடவை. ஆலங்குழாய், கல்வளை என்பனவே அப்பிள்ளையார் தலங்கலாகும் பிள்ளையாருக்குக் கோவில் அமைத்து வழிபட்ட பின் இளவரசியின் குதிரைமுகம் அவளது பார்வைக்கு முற்றாக நீங்கியது என்கிறது மரபு வழி வந்த கதை.





## மரபுக் கதை 19

## செண்பகப்பெருமாள்

யாழ்ப்பாணத்தில் உள்ள நல்லூர் பிரசித்தமான வரலாறு உள்ள கோவில்.

ஆரம்பத்தில் பூனகரி என்ற இடத்திறகு அருகாமையில் உள்ள நல்லார் கிராமத்தில் நல்லூர் முருகன் கோவில் கி.பி 940யில் உருவாக்கப் பட்டதாகவும் பின்னர் யாழ்ப்பாணத்துக்கு இடம் பெயரப்பட்டாதாகவும் ஒருசாரரர் கருத்து. 1591 ஆம் ஆணடு யாழ்ப்பாணததை போத்துக்கேயர் கைப்பற்றி பல இந்துக் கோவில்களை அழிதனர். ஆதில் 1612ஆம் ஆண்டு, நல்லூர் முருகன்; கோவிலை இடித்துத் தரைமட்டமாக்கினர். பல தடவை கோவில் ஈடகப்பட்டு குருக்கள் வளவு, யமுனா ஏரி ஆகிய இடங்களில் இடம் பெயர்ந்து இறுதியாக ஒல்லாந்தரின் ஆட்சி காலத்தில் தற்பேர்து கொவில் உள்ள இடத்தில் அப்போது ஒல்லாந்தர் ஆட்சியின்போது சிறாப்பராக வேலை செய்த டொன் ஜுவான் மாப்பாண

*முதலியாரின் முயற்சியால் தற்போதைய இடத்தில் 1734 ஆம் ஆண்டு திரும்பவும் உருவாக்கப்பட்டது. நல்லூர் கோவில் பல தடவை அழிக்கப்பட்டு மீண்டும் கட்டப்பட்டதாக வரலாறு சொல்கிறது.*

*நல்லூர் முருகன் கோயிலில் திருவிழாக்காலங்களில் கட்டியம் சொல்லும் போது "சிறீ சங்கபோதி புவனேகபாகு" என நினைவு கூறப்படுகிறது. யார் இந்த சிங்களப் பெயருடைய மன்னன்? இவனுக்கும் நல்லூருக்கும் என்ன தொடர்பு? என பலர் மனதில் வினா எழும்பலாம். வரலாற்றின்படி நல்லூர் மாநகரை அழித்து பின்னர் தான் செய்த பாவத்தை உணர்ந்து நல்லூரைப் புதுப்பித்து கோயிலைக் கட்டியவன் தான் யாழ்ப்பாண மன்னன்*

*கனகசூரியனைப் போரில் வென்று கைப்பற்றிய “சப்புமல் குமாரயா” என்ற கோட்டையை ஆண்ட ஆறாம் பராக்கிரமபாகுவின் சுவீகாரப் புத்திரன். பிறப்பால் கேரளாவைச் சேர்ந்த பணிக்கர் குடும்பத்தைச் சோந்தவன் சப்புமல் குமாரயா. உண்மைப் பெயர் செண்பகப் பெருமாள். செண்பகப் பூவின் மகன் என்பதைக் கருத்தாகக் கொண்டது. இந்து மதம் அவன் பிறந்தமதம். வளர்ந்த மதம் பௌத்தம். தமிழ் அவன் பிறந்த மொழி. ஆனால் வளரும் போது கற்ற மொழி சிங்களம்.*

*விஜயநகர மன்னன் இரண்டாம் கிருஷ்ணதேவர் (1422 — 1446.) இலங்கைமேல் படையெடுத்த போது தோல்வியைத் தழுவினான். அவன்*

திரும்பவும் இந்தியா திரும்பும் போது யாழ்ப்பாணத்தில் ஒரு படையை நிலைநிறுத்திச் சென்றான். அவனக்குப்பின் மன்னனான மலிக்கிருஷ்ணன் ஆட்சிக் காலத்தில் உள்நாட்டு பிரச்சனையால் விஜயநகர இந்து சாம்ராஜய்ம் வலு இழந்தது. அச்சமயம் இலங்கையில் கோட்டையை ஆண்ட ஆறாம் பராக்கிரபாகு மன்னனுக்கு விஜயநகர சாம்ராஜ்யத்தின் பலவீனம் உதவியாக இருந்தது. இனியும் அவர்கள் இலங்கைமேல் போர் தொடுக்க மாட்டார்கள் என அறிந்த கோட்டை மன்னன் பராக்கிரமபாகு தன் ஆட்சியை விஸ்தரிக்கத் தொடங்கினான். நாட்டின் பெரும் பாகம் அவனது ஆட்சியின் கீழ வந்தது. ஆனாலும் சில பகுதிகள் அவனுக்கு திறை செலுத்தாமல் தலையிடியைக் கொடுத்தது. அக்காலத்தில் கைதேர்ந்த

போர்வீரர்களை சேர நாட்டில் இருந்து இறக்குமதி செய்து பகைவருடன் போர் தொடுக்கும் வழமை இருந்து வந்தது. அவ்வாறு வந்தவர்களே வன்னியர்கள். யாழ்ப்பாண அரசை குணவீர சிங்கை ஆரியன் பரராசசேகரன் ஆட்சிசெய்தான். இவன் 1440ல் இறக்க இவன் மகன்; கனக சூரியன் சிங்கை ஆரியன் செகராஜசேகரன் அரசனான்.

கோட்டை அரசன் பராக்கிரமபாகுவிற்கு யாழ்ப்பாண அரசின் மேல் ஒரு கண் எப்போதும் இருந்து வந்தது. கேரளாவில் இருந்து வந்த போர்வீரர்களில் பணிக்கன் என்பான் மன்னனின் அபிமானத்துக்கு ஆளானான்; இவனது தேகவலிமையும் வாட்போர் திறனும் மன்னனை திகைக்கவைத்தது. களரிபத்து கலை

கேரளாவில் பிரபல்யமான காலமது. கேரள வீரர்கள் பலர் அதில் தேர்ச்சிபெற்றவர்கள், தமிழ் பேசும் இந்து சமய வாதிகள்.; அப் பணிக்கனை தன் மெய் காப்பாளனாக்கி தனது சிங்கள குலப்பெண்ணொருத்தியை மணம் முடித்து வைத்தான் மன்னன். இப்பணிக்கன் தம்பதிகளுக்கு இரு ஆண்குழந்தைகள் பிறந்தனர். அதில் மூத்தவனுக்கு “செண்பகப் பெருமாள்” எனவும் இரண்டாமவனுக்கு “ஜெயவீரன்” எனவும் பெயர் சூட்டினர் ஆனால் மன்னனோ அவர்களை சுவீகாரம் எடுத்து அவர்களுக்கு முறையே “சப்புமல்குமாரயா”, “அம்புலகலகுமாரயா” என்ற சிங்களப் பெயர்களை சூட்டினான். குமாரயா என்பது மகனைக் குறிக்கும். சப்புமல் என்பது செண்பக மலரினைக் குறிக்கும். தாய் சிங்களத்தி, தகப்பன் தமிழன் என்ற படியால்

தமிழ், சிஙகளப் பெயர்களுடன் இரு ஆண்குழந்தைகளும் வளர்ந்தார்கள். தகப்பன் உடலில் ஓடிய வீர இரத்தம் பிள்ளைகளிலும் ஓடியது போலும். பணிக்கனின் புத்திரர் இருவரும் தேகவலிமையிலும், போர்க்கலையிலும் வல்லுனரானார்கள். தந்தையின் பயிற்சியினால் அவர்களின் வீரம் பிரகாசித்தது. பராக்கிரமபாகுவிற்கு ஆண் பிள்ளைகள் இல்லாத காரணத்தால் இவ்விருவர் மீதும் அளவு கடந்த அன்பைச் சொரிந்தான். தனக்கு பின் சப்புமல் குமாரயா ஆட்சியேற்பான் என்ற எண்ணத்தைச் சுவீகாரப் புத்திரன் மனதில் உருவாக்கினாhன். ஆனால் விதி வேறு விதமாக விளையாடிவிட்டது. பராக்கிரமபாகுவின் புத்திரி உலகுடையதேவிக்கு ஜெயவீரன் என்ற ஒரு

மகன் பிறந்தான். அது மன்னனின் எண்ணத்தை மாற்றிவிட்டது. தன் இரத்த தொடர்புள்ள தனது புத்திரியின் மகனை அரசானாக்கும் எண்ணம் அவன் மனதில் வளரத் தொடங்கியது. தனது சுவீகாரப் புத்திரனான சப்புமல் குமாரயா இராச்சியத்துக்கு வந்தால் தன் பேரப்பிள்ளைக்கு அரசபதவிகிட்டாதென யோசிக்கத் தொடங்கி, அவர்களை ஒழித்துத் தட்ட திட்டம் தீடடினான்.

வன்னியில் சிற்றரசர்கள தனக்கு கீழ்படியாது கலவரம் செய்கிறார்கள் எனக்கூறி சப்புமல்குமாரயாவை அழைத்து அவர்களை அடக்கி வரும்படி ஒரு படையுடன் அனுப்பினான். அதே சமயம் சப்புமல் குமாரயாவின் தம்பி ஜெயவீரனை கண்டியரசனை வென்று வரும்படி

படையுடன் இன்னொரு திக்கில் அனுப்பினான். இருவர்களும் போரில் இறப்பார்கள் என அவன் எதிர்பார்த்தது நடக்கவில்லை. வன்னி சென்ற சப்புமல் குமாரயா வன்னியரை வென்று திறையுடன் மீண்டான். இவ்வெற்றியால் மகிழ்ந்த பராக்கிரமபாகு யாழ்பாண இராச்சியத்தை வென்று வரும்படி செணபகப்பெருமாளை படையுடன் அனுப்பினான். யாழ்ப்பாண இராச்சியம் வெகு தூரத்தில் இருந்தபடியால் இந்த முறை இவன் போரில் இறப்பது நிட்சயம் என மன்னன் நினைத்தான். படையுடன் பூநகரி ஊடாக யாழ்குடாநாட்டை அடைந்த செணபகப்பெருமாள் அரண்களையும் துறைமுகங்களையும் கைப்பற்றினான். அவனோடு கேரள வீரர்களும் சிங்கள வீரர்களும் சென்றனர். கொண்டைக்காரத்

தமிழர், பணிக்கர், வடக்கர் கொண்ட கனகசூரியனின் பெரும்படை செண்பகப்பெருமாளின் படையோடு மோதியது. செண்பகப்பெருமாளின் வீரத்துக்கு ஈடு கொடுக்கமுடியாது கனகசூரியன் படை பின்வாங்கிற்று. தனது படைக்கு உற்சாகம் கொடுத்தவாறே எதிரியின்; படையினரைத் துவம்சம் செய்தான் செண்பகப் பெருமாள். எதிரிகளின் படை புறங்கொடுத்து ஓடியது. கனகசூரியன் தன் குடும்பத்தோடு இந்தியாவுக்கு ஓடி, திருக்கோவலூரில் அபயம் புகுந்தான். ஒரு தமிழ் மறவன் இன்னொரு தமிழர் படைக்கு எதிராக புரிந்த போராக அது சரித்திர ஏடுகளில் பொறிக்கப்பட்டாலும் “கோகில சந்தேச” வென்ற சிங்கள நூல் செண்பகப் பெருமாளை சப்புமல் குமாரயா என்ற

சிங்கள வீரனாக சித்தரித்து கவிபாடியது. யாழ்ப்பாணத் தலை நகருக்குள் புகுந்து மதங்கொண்ட யானையைப் போல் மாடமாளிகைகளை இடித்து தரைமட்டமாக்கினான். பின்னர் பல அதிகாரிகளை சிறைப்பிடித்து கோட்டை நகருக்கு மீண்டான். செண்பகப்பெருமாள் கிபி1450 முதல் கிபி 1467 வரை 17 வருடங்கள் யாழ்ப்பாணத்தை ஆட்சி செய்தான்.

சென்றவிடமெல்லாம் வெற்றிவாகை சூடி திரும்பிய செண்பகப்பெருமாளுக்கு “ஆரிய வேட்டை ஆடும் பெருமாள்” என நாமம் சுட்டி யாழ்ப்பாணத்தை அரசு புரிய அனுப்பினான் பராக்கிரமபாகு. கோட்டையில் செண்பகப் பெருமாள் இருந்தால் தன் பேரன் அரசனாக முடியாது

என்பது அரசனுக்குத் தெரியும். காரணம் வீரர்கள் செண்பகப்பெருமாளுக்கு ஆதரவாக இருந்ததே. மன்னனின் கபடசிந்தனையை புரியாது செண்பகப்பெருமாள் யாழ்ப்பாணம் திரும்பி நகரை புனருத்தாரணம் செய்தான். கோட்டை மன்னன் யாழ்ப்பாண இராச்சியத்தைக் கைப்பற்ற இவனை அனுப்பிய போது முத்திரைசந்தைக்கு அருகாமையில் உள்ள நகரமும் குருக்கள் வளவில் இருந்த முருகன் கோயிலும் அவனால் சிதைக்கப்பட்டது. மக்களின் வெறுப்பைச் சம்பாதிக்க விரும்பாமல், கோயில் அழிந்து போன இடத்தில் கட்டாது திரும்பவும் புது இடத்தில் முருகன் கோயிலும் நகரமும் அமைத்து ஸ்ரீசங்கபோதி புவேனக்கபாகு என்றபெயரில் ஆட்சிபுரிந்தான்.

யாழ்பாணத்தில் நல்லூரில் கந்தசாமி கோயிலை அமைத்த பெருமை புவேனக்கபாகு என்ற செண்பகப்பெருமாளைச் சாரும். அரண்மனை, அரசமாளிகைகள் என்பன அமைந்த பண்டாரவளவு, சங்கிலித் தோப்பு (இது பின் வந்த பெயர்) ஆகிய இடங்களுக்கு அருகே, இன்று முத்திரைச்சந்தையிலிருந்து செம்மணிக்குப் போகும் பாதையில் உள்ள கிறிஸ்தவ தேவாலயம் அமைந்துள்ள இடத்தில் கோயில் அமைத்தான். இன்றும் நல்லூர் கோயில் கட்டியதற்காக ஸ்ரீசங்கபோதி புவேனக்கபாகு என அவன் புகழ்பாடப்படுகிறது என்பது பௌத்தர்களின் விளக்கம். இங்கு ஸ்ரீ சங்கபோதி என்ற சொல் பௌத்தமதத்தில் பாவிக்கப்படும் சொல் என்பது அவர்கள் வாதம். சப்புமால்

குமாரயா சைவசமயவாதியாக இருந்தும் புத்தசமயத்தையும் பரிபாலித்து வந்ததோடு இரு சமயத்தினரையும் சமரச நிலையில் பாவித்து வந்தான். அக்காலத்தில் இவன் தமிழ் சிங்களம், சமஸ்கிருத மொழிகளிலும் பாண்டித்தியம் பெற்றிருக்கலாம் என்கிறார்கள் வரலாற்று நிபுணர்கள்.

மாவிட்டபுரம் கோயில் ஆதீனப் பிராமணர் ஒருவர் இவ்வரசனுக்கு விருந்தளித்ததாகவும்; அவ்விருந்தைப் புகழ்ந்து தமிழில் மன்னன் வெண்பா ஒன்று பாடியதாகவும் ஐதீகம் உண்டு.

பராக்கிரமபாகு தான் இறக்குமுன் தன் பேரன் ஜெயவீரனுக்கு கோட்டை அரசனாக முடிசூட்டினான். பாரக்கிரமபாகு இறந்தபின்னர், அதைக் கேள்விப்பட்ட செண்பகப்பெருமாள் எனும் புவனேகபாகு

*யாழ்ப்பாணம் விட்டு கோட்டைக்குச் சென்று, ஜெயவீரனைக் கொன்று, கோட்டை இராச்சியத்துக்கு அரசனானான். கோட்டைக்கு செண்பகப் பெருமாள் அரசனான போது யாழ்ப்பாணத்துக்கு விஜயவாகு என்ற சிங்கள வீரன் ஒருவனை அரசானாக நியமித்தான். அதனையறிந்த கனகசூரியன் தனது புத்திரர்களுடனும் சேனையுடனும்; திரும்பவும் யாழ்ப்பாணம் வந்து விஜயபாகுவை போரில் தோற்கடித்து யாழ்ப்பாண ஆட்சியை கைப்பற்றினான். நல்லூர் நகரைப் புதுப்பித்தான். செண்பகப்பெருமாள் வெற்றி கொண்ட போது அழிக்கப்பட்ட தமிழ் சங்கத்தை திரும்பவும் நிறுவினான்.*

*ஆய்வு நூல்: யாழ்ப்பாணச் சரித்திரம் — முதலியார் செ இராசநாயகம்*



## மரபுக் கதை 20

## சீனிகம கோவில்

காலி கொழும்பு பாதையில் கடற்கரை ஓரமாக உள்ள ஊர் ஹிக்கடுவ. இது உல்லாசப் பயணிகள் விரும்பும் இடம். இக்கிரமத்தின் கடற்கரைக்கு அருகே. கடலில்., ஒரு குன்றில் சீனிகம கோவில் அமைந்துள்ளது. மரபு வழியே உருவாகிய கிராமபுர டெவொல தெய்வத்திற்கான கோவில் இது. தமிழ்நாட்டில் மதுரைவீரன் போன்ற கதை போல், இலங்கையின் தென் கரையோரப்பகுதியில் வாழும். மீனவ இன மக்களால் மந்திரசக்தி உள்ளவனாக நம்பப் படும் டெவொல என்ற வீரனுக்கு கோவில் அமைத்து வழிபட்டுவருகிறார்கள். மீனவர்களையும் அவ்வூர் பிக்குகளையும் டெவொல தெய்வம் பாதுகாக்கும் என கரையோரச் சிங்கள மக்கள் கருதுகிறார்கள்.

இதிகாசத்தின் படி டெவொல என்ற

இளவரசன் இந்தியாவில் மல்லா நகரத்தை ஆண்ட ஸ்ரீ சுவர்ண ராமசிங்கா என்ற மன்னனுக்குப் பிறந்த ஏழு ஆண் குழந்தைகளில் ஒருவன். இந்தகதை இராமனுக்கும்> இராமாயணத்தில் வரும் இராமனுக்கும், மிதிலைக்கும் தொடர்பில்லை. சுவர்ண ராமசிங்கா மன்னனுக்கு தேடாபதி, குணபதி, மித்தாபதி, ரதாபதி, மிகிபதியாசாபதி, அக்னிபதி என்ற பெயர்களல் ஏழு மனைவிமார் இருந்தனர். இந்த ஏழு மனைவிமார்களும்; டெவொல், ஹிருராஸ், சந்தரராஸ், அக்னிராஸ், மகராஸ், குடாராஸ், சமிராஸ்,; என்ற பெயர்களில் ஏழு ஆண் குழந்தைகளை பெற்றெடுத்தனர் எடுத்தனர். டொவலொக்கு அந்துன குரும்பர. சந்துன் குரும்பர. ஏர்டி குரும்பர. மல் குரும்பர. தல குரும்பர. குரும்ப. வாதிகர குரும்பர என்ற

வேவவேறாள ஆறு பெயர்களும். உண்டு.

முற்காலத்தில் உருவாக்கப்பட்ட கட்டுக்கதைகள் பெரும்பாலும் மிகைப் படுத்தபடடு மக்களிடையே நம்பிக்கையை வளர்த்த கதைகள். அவை மூட நம்பிக்கைகளுக்குத் துணைபோயின.

விஜயன் இலங்கைக்கு வரமுன்பிருந்தே சீனிகம கோவில் இருந்து வந்ததாகப் பல வரலாற்றுக்காரர்களின் கருத்து. அதற்கான போதிய ஆதாரங்கள் இல்லை. ஆனால் பத்தினி வழிபாடு சிங்களவர்களிடையே விஜயனின் வருகைக்குப் பல வருடங்களுக்குப் பின்னரே ஆரம்பித்ததாக சரித்திரம் கூறுகிறது. இளவரசன் விஜயனை அவனோடு அவன் நணபர்கள் 700 பேரையும் கப்பலில் ஏற்றி அவன் தந்தை எப்படி நாடு கடத்தினாரோ. அதே போல்

வயது வந்தவ்hகளையும் மிருகங்களையும். டெவொலாவும் அவனது ஆறு சகோதரர்களும் கொன்று வந்ததினால்> மக்கள் மன்னனிடம் போய் முறையிட்டனர். கோபமுற்ற மன்னன், டெவோலையும் அவனது ஆறு சகோதரர்களையும் தோணியில் ஏற்றி நாடுகடத்தினான். தோணி யாழ்ப்பாணம், பாணதுறை. டொன்ரா. காலி ஆகிய துறைமுகங்களை சென்றடைந்த போது டொலாவையும் அவனது சகோதரர்களையும் கரை சேர அத்துறைமுகங்களில் அனுமதி வழங்கப்படவில்லை. இறுதியில் தோணி காலியில் இருந்;து, வடக்கே 14 மைல்; தூரத்தில் உள்ள சீனகம கரையை அடைந்தது.

சக்ரா என்ற தெங்வம் அவர்களைக்

காப்பாற்றி கரை சேர்த்தது. ஆனால் அவர்கள் கரை சேர்ந்த பகுதிக்கு பத்தினி தெய்வம் என்ற கண்ணகி அம்மன் காவல் தெய்வமாகையால் அத்தெய்வம் ஏழு தீக்குன்றங்களை உருவாக்கி அவர்களை கரை சேர விடாமல் தடுத்தது. சகோதரரர்கள் தங்கள் ஆயுதங்களைத் தீயுக்குள் வீசி எறிந்தார்கள். தீயானது நீராகியது. அந்த ஏழு பேர்களில் டேவொல மட்டுமே தப்பிப் பிழைக்க முடிந்தது, அவன் மேல் பத்தினி தெய்வம் பரிதாபப்பட்டு கரை சேர அனுமதித்தது.

ஸ்கந்த (முருகன்) கடவுள் பத்தினி தெய்வத்தோடு ஒரு உடன்பாடு செய்து டெவோலை அங்குவாழ வழிசெய்தது. சீனிகம. உனவட்டுன. தொடன்துவ. வீராகொட. ஜின்தொட்ட. அம்பலான்கொட.

பாணந்துறை ஆகிய ஊர்களில் வாழுபவர்களின் நோய்களை குணப்படுத்துவதற்காக டெவொலவுக்கு காணிக்கைகள்; செலுத்திளார்கள்.

டெவொல சீனிகமவில் இருந்து 6 மைல் தூரத்தில உள்ள வீராகொட கிராமத்தில் வாழந்த ஒரு பெண்ணோடு வாழத் தொடங்கினான். வேலையில்லாத டெவொல> சீனிகமவுக்கு தினமும் ஒரு கைத்தடியோடு வீராகொடவில் இருந்து போய்வந்hன். போய் வீடு திரும்பும்போது அரிசி> மீன் தேங்காய்கள் ஆகியவற்றை கொண்டு வ்து தன் வைப்பாட்டிக்கு கொடுப்பான். அவனோடு வாழந்த அவனது வைப்பாட்டிக்கு அவனின செயல் ஆச்சரியத்தைக் கொடுத்தது. எப்படி வேலை இல்லாத டெவொலவால்

இப்பொருட்களைக் கொண்டுவர முடிந்தது என அவன் மேல் சந்தேகித்தாள்.

டெவொலவுக்கும் அவனுக்கு வைப்பாட்டியாக இருந்த பெண்ணுக்கும்> சில வருடங்களில் ஒரு மகன் பிறந்தான். அவன் வளர்ந்ததும் அப்பெண் தன் சந்தேகத்தைப் போக்க “மகனே உன் தந்தைக்கோ வேலை இல்லை> ஆனால் தினமும் சீனிகமவுக்கு போய் அரிசி, மீன். தேங்காய்கள் கொண்டு வருகிறார். அது எப்படி அவரால் முடியும் என்பதை நீ அறிந்து வா என்று இரகசியமாக மகனுக்குச் சொல்லி அனுப்பினாள். மகனும் டெவொலவுக்க தெரியாமல் அவனைத் தொடர்ந்து சென்று நடப்பதை அவதானித்து வீடு திரும்பி வந்தான்.

“அம்மா என் தந்தை கடற்கரை மண்ணை

அரிசியாகவும்> மீன்களாகவும் தன் கைத்தடியின் மந்திரசக்தியைக் கொண்டு மாற்றுகிறார். கடற்கரை ஓரத்தில் உள்ள தென்னை மரங்களில் இருந்து கைதடியைப் பாவித்து தேங்காய்கள் ஆய்கிறார். அவருடைய கைத்தடி மந்திரசக்தி வாய்ந்தது” எனறு தாயுக்குச் சொன்னான். இந்தக் கதை ஊர் மக்களிடம் வெகு விரைவாகப் பரவியதும. அவர்கள் டெலோவை ஒரு மந்திரவாதி என்றும் அதனால் எதையும் செய்க் கூடியவன் என நினைத்தனர்.

தனது இரகசியத்தை வைப்பாட்டியும் மகனும் கண்டுபிடித்துவிட்டார்கள் என அறிநது கோபப்பட்ட டெலொவா அவர்கள் இருவரையும் கொலை செய்தான் டெலொவா தன் கைத்தடியைத் தன்னோடு கொண்டு செல்லாமல் ஊரை விட்டு

வெயியேறினான். அக் கைத்தடியானது, கிடைக்கப் பெறமுடியாத ஒரு பெரும் மரமாக வளர்ந்தது. ஊர்வாசிகள் டொலோவவை வணங்கக் கூடிய கடவுள் எனத் தீர்மானித்து காணிக்கைகள் செலுத்தி வணங்கத் தொடங்கிளர். இன்றும் சீனிகமவைத் தாண்டிச் செல்வோர் உண்டியலில் காணிக்கை செலுத்தியெ; செல்வார்கள்; தங்களுக்கு தீமை விளைவித்தவர்களுக்கு எதிராக, டெலொவோ தெய்வத்திடம் தமது எதிரிகளுக்கு ஏதாவது தீங்கு நடக்வேண்டும்; என வேண்டுகோள் வைப்பார்கள்; இது ஒரு வித சூனியமாகும். எதிரிக்கு சாபம் கொடுக்கும் போது கல் உரலில் மிளகாய் இடித்துபடியே சாபம் கொடுப்பது இவ் ஊர் வழக்கம்.

இப்பகுதிக்கு உருத்தான பேய் நடனம் *(Devil Dance)* பாடல்களுடன் கப்புரால என்று அழைக்கப்படும் பூசாரியின் தலைமையில் டெவெலோ என்ற தெய்வத்துக்கு சமாப்பணமாக உருவந்து ஆடுவார்கள். நடனத்துக்கு ஏற்றவாறு மண்வாசனையுள்ள பேச்சுவழக்கு மொழியில் பாடல்கள் பாடுவார்கள். பேய்களின் முகத் தோற்றத்தில் முகமூடிகளை தயாரித்து, அம்பலாங்கொடை பகுதியில் விற்பனை செய்கிறார்கள். அம் முகமூடிகளுக்கு சுற்றிலாப் பயணிகளிடையே ஏகப்பட்ட கிராக்கி உண்டு.



1

# நூலாசிரியர் அறிமுகம்.

பொன் குலேந்திரன் ஆகிய நான், ஒரு காலத்தில் இலங்கை யாழ்ப்பாண இராட்சியத்தின் தலைநகராக இருந்த நல்லூரைப் பிறப்பிடமாகக் கொண்டவன். யாழ்ப்பாணம் பரியோவான் *(St John's College)* கல்லூரியில் ஆரம்பக் கல்வி கற்று, கொழும்பு பல்கலைகத்தில்

பௌதிகத்துறையில் சிறப்பு பட்டம் பெற்றவன். இலங்கை தபால் தந்தி திணைக்களத்தில் சிரேஷ்ட அத்தியட்சகராக கடமையாற்றி, அதன் பின்னர் துபாய் , அபுதாபி, சார்ஜா, இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளில் தொலை தொடர்பு *(Telecommunication sector)* துறையில் சிரேஷ்ட பொறியியலாளராக வேலை செய்தவன். பின்னர் கனடா "டெலஸ்" *(Telus)* தொலை தொடர்பு ஸ்தாபனத்தில சிரேஷ்ட முகமையாளராக *(Senior Product Manager)* கடமையாற்றி, ஓய்வு பெற்றவன.;

தற்போது நான் ஒரு கனடா பிரஜை. பத்து வயதுமுதற் கொண்டே எழுதத் தொடங்கியவன். "குவியம்;" என்ற இணையத்தள சஞ்சிகையை நடத்தியவன். கனடா ஒன்றாரியோ மாகாணத்தில்

வெளிவரும் தமிழ் பத்திரிகைகளுக்கும் எழுதி வருகிறேன்;. பீல் மிசிசாகா>,முது தமிழர் சங்கத்தில் ஐந்து வருடங்கள் தலைவராக இருந்தேன். “பார்வை” எனது முதல் மின்நூல் சிறுதைத் தொகுப்பு. நான்ஆங்கலத்திலும் தமிழிலும் எழுதி வருகிறேன்;.

ஆங்கிலத்தில்-

*Short Stories from Sri Lanka*

*Hinduism a Scientific Religion & Some Temples in Sri Lanka.*

*Sufferings of Innocent Souls ( Short stories on HR Violations)*

*The Dawn ( A novel of an Immigrant family to Canada from Jaffna — Sri Lanka)*

*Strange Realtionship (21 Short Stories)*

.அகிய நூல்களையும்

தமிழில்:

விசித்திர உறவு *(சிறுகதைத் தொகுப்பு)*

அழகு *(சிறுகதைத் தொகுப்பு)*

அருவி *(கவிதைகள்)*

வளரும் வணிகம்( *(சந்தைப் படுத்தல்)*

அறிவுக்கோர் ஆவணம் *(கட்டுரைகள்)*

கோபுர தரிசனம் கோடி புண்ணியம்;

ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளேன்.

*“முகங்கள்” எனது மூன்றாவது 21 கதைகள் அடங்கிய சிறுகதைத் தொகுப்பு.*



*kulendiren2509@gmail.com*